# நடக்கும் ரெய்டுகள் ஜெ.யின் செல்வாக்கைக் குறைக்குமா?



கவர்னர் முதற்கொண்டு அத்தனை எதிர்க்கட்சிகளும் ஒட்டுமொத்தமாக அ.இ.அ.தி.மு.க.வின் ஊழல், அதிகார துஷ்பிரயோகம், சொத்து சேர்ப்பு என்று குரல் கொடுத்து ஓய்ந்து போன சமயம், மத்திய அரசு செயல்படத் துவங்கியிருக்கிறது. குறிப்பாக டெல்லி ஜெயின் சகோதரர்கள் வழக்கை அந்நியச் செலாவணி அமுலாக்கப் பிரிவு (சுருக்கமாக அ.செ. அ.பி.) விசாரிக்கத் துவங்கி, அது அமீரில் தொடர்ந்து தினகர், திவாகர் என்று வெற்றி நடைபோடுகிறது. மன்மோகன் சிங்கின் சமீபத்திய சென்னை விஜயத்திற்குப் பின்னர்தான் களத்தில் இறங்க அ.செ.அ.பி. முடிவு செய்ததாம். பிரதமரின் வாய்மொழி உத்தரவைப் பெற்றுத்தான் சோதனை துவங்கியது.

இதில் இன்னொரு விசித்திரம் என்னவென்றால் மத்திய அரசின் அமைப்புகள் எடுக்கப்போகும் நடவடிக்கைகளை, மாநில அரசின் ஸ்பெஷல் பிராஞ்ச் கூர்ந்து கவனித்து சசிகலா & கோவுக்கு தேவையான தகவல்களைச் சொல்கிறது என்றும் ஒரு தகவல்.

மத்திய அரசு இப்போது இந்த சோதனைகளை நடத்துவதற்குக் காரணம் அ.தி.மு.க.வை மிரட்டி பணியவைத்துத் தேர்தல் கூட்டணி வைத்துக் கொள்ளத்தான் என்று பாமரர்கள் மத்தியில் கூடப் பேசப்படுவது நிஜந்தானா? "ஜெ. அரசு எப்படிப் பட்டது என்றும், அதனுடன் உறவு வைத்தால் காங்கிரஸுக்கு எப்படி பாதகமாக அமையும் என்றும் பிரதமருக்கு நன்றாகவே தெரியும்" என்கிறார் குமரி அனந்தன்.

"இதுவும் 1975 கால கட்டத்தில் தி.மு.க. ஆட்சிக்கு எதிராக எடுக்கப்பட்ட நடவடிக்கை போன்றதுதான். கூடிய விரைவில் விசாரணை கமிஷன் போடப்பட்டு ஜெயின் ஊழல்கள் அம்பலத்திற்கு வரலாம். இன்னமும் சொல்லப் போனால் விசாரணை கமிஷன் அறிக்கை தாக்குதல் செய்யும் வரை மாநில சட்டமன்றத் தேர்தலே தள்ளி வைக்கப்படலாம்!" என்று சொல்கிறார், பண்ருட்டி ராமச்சந்திரன்.

யாரையும் மதிக்காமல் எடுத்தேன். கவிழ்த்தேன் என்று செயல்படும் ஜெ.விற்கு பாடம் கற்பிக்காமல் பிரதமர் விட மாட்டார் என்பது பண்ருட்டியின் வாதம். "முன்பு ஒரு முறை நம்பிக்கையில்லாத் தீர்மானத்தின் போது பிரதமரை எதிர்த்து வோட்டுப் போட்டது அ.தி.மு.க. அதை இன்னமும் பிரதமர் மறக்கவில்லை" என்றும் சொல்கிறார் பண்ருட்டி. ஆனால் இதை விட குறிப்பிடத்தக்க விஷயம் என்ன வென்றால் ஜெயிடம் உள்ள பணபலத்தை முடக்குவதுதான் மத்திய அரசின் நோக்கம். கோடிக்கணக்கான ரூபாய்களை முடக்கினால் ஆணவம் தானாக இறங்கிப் போகும் என்றும் மத்திய அரசு கருதுகிறது என்கிறார்கள் சிலர்.

இதற்கிடையில் அ.செ.அ.பி.வுடன் வருமானவரித் துறை, வருமான புலனாய்வு ஆகிய அமைப்புகளும் சேர்ந்து கொண்டிருக்கின்றன. தி.மு.க. மீது குற்றச் சாட்டுகள் சுமத்தி விட்டு பின்னர் அவர்களுடன் கூட்டுச் சேர்ந்த விஷயத்தைக் குமரிஅனந்தனிடம் ஞாபகப்படுத்திய போது, "கடந்த காலத்தில் பல சம்பவங்கள். ஏகப்பட்ட பாடங்களையும், பாதகங்களையும் அனுபவித்தாகி விட்டது. இனிமேல் அதுபோல் எதுவும் நடக்காது" என்கிறார். இருப்பினும் சிலர் ஜெயுடன் கூட்டு வரும் என்றே நம்புகிறார்கள்.

இப்போது நடந்திருக்கும் சோதனைகள் முதற்கட்ட நடவடிக்கைதானாம். அடுத்த கட்டத்தில் நடராஜன், சசிகலா, ஜெ. உட்பட எல்லோரும் வளைக்கப்படுவார்கள் என்கிறது அதிகார வட்டாரம். ரெய்டுகளும் சோதனைகளும் இப்படி நடப்பதால் ஜெயின் செல்வாக்கு மக்களிடம் குறைய வாய்ப்புள்ளதா? மக்கள் இப்போதெல்லாம் ஊழல் விஷயங்களைப் பெரிதாக எடுத்துக் கொள்வதில்லை. யார் வந்தாலும் ஊழல் நடப்பது நடந்து கொண்டுதான் இருக்கும் என்பது உறுதியானதால் மக்களிடம் இதனாலெல்லாம் செல்வாக்கு சரியாது என்பது அ.தி.மு.க.வினரின் எதிர்பார்ப்பு. ஆனால் அவர்கள் நினைக்கிற மாதிரி மக்களெல்லாம் இளித்தவாயர்கள் இல்லை என்பதைத் தேர்தல்தான் நிரூபிக்க வேண்டும்.

— தில்லப்பா

**தாபர் - டூபாண்ட்:**

# நச்சுத் தன்மையைப் பரப்பப்போகும் நைலான் தொழிற்சாலை!

சில நாட்களுக்கு முன்னர் கும்மிடிப்பூண்டியில் அமையவிருக்கும் நைலான் தொழிற்சாலை பற்றி சு.சுவாமி விட்ட அறிக்கை, பாமரனின் பார்வையில் படாமல் போயிருக்கலாம். ஆனால் சுற்றுப்புறச் சூழல் ஆர்வலர்கள் அதனால் விழித்துக் கொண்டு விட்டார்கள் என்றே சொல்லலாம்.

"625 கோடி மூலதனத்தில் தாபர்-டூபாண்ட் நிறுவனம் கும்மிடிப்பூண்டியில் துவங்க இருக்கும் நைலான் தொழிற்சாலையால், சுற்றுச்சூழல் மாசுபடும். நிலத்தடி நீர், விஷமாகிவிடும். இந்தத் தொழிற்சாலை முதலில் கோவாவில் அமையவிருந்தது. ஆனால் அங்கே மக்கள் எதிர்ப்புத் தெரிவித்துப் போராடினார்கள். அழகான கடற்கரைகளைக் கொண்ட கோவா, இந்த தொழிற்சாலையால் அழகிழந்து விடும் என்று அங்குள்ள சுற்றுச்சூழல் இயக்கங்கள் போராடின. அதன் விளைவு தாபர் - டூபாண்ட் அங்கிருந்து டெண்டை கிளப்ப வேண்டியதாகி விட்டது.

பின்னர் இந்த நிறுவனம் கிட்டத்தட்ட எட்டு மாநிலங்களில 14 இடங்களைப் பார்த்தது. ஆயினும் அங்குள்ள ஆட்சியாளர்கள், தொழிற்சாலையின் தன்மையைப் புரிந்து கொண்டு அனுமதிதர மறுத்து விட்டார்கள். இப்போது கடைசியாகச் சென்னைக்கு வந்து தங்கள் நோக்கத்தில் வெற்றி பெற்று விட்டார்கள்.

டூபாண்ட் என்ற அமெரிக்க நிறுவனம் அமெரிக்கா மற்றும் ஐரோப்பாவில் 12 இடங்களில் உயர்தர நைலான் இழை தொழிற்சாலைகளை நடத்துகின்றது. இவர்கள் தயாரிக்கும் 6, 6 என்ற நைலான் இழை, ரேடியல் டயர் உற்பத்தியில் முக்கியப் பங்கு வகிக்கிறது. கும்மிடிப்பூண்டியில் இவர்கள் தாபர் நிறுவனத்துடன் கூட்டு சேர்ந்து துவங்க இருக்கும் இந்தத் தொழிற்சாலை, ஆசியாக் கண்டத்திலேயே இதுபோன்ற தொழிற்சாலைகளில் முதலாவது. வருடத்திற்கு 18,500 டன் நைலான் உற்பத்தி செய்யும். ஆயினும் சுற்றுச் சூழல் விஷயம் ரொம்பவும் பாதிக்கப்படுமே என்கிற நிலையில் அனுமதி வழங்கியது எப்படி?

"விஷயம் வேறொன்றுமில்லை; பெட்டி கைமாறியிருக்கிறது. அ.தி.மு.க. அரசுக்கு மக்களைப் பற்றியோ, எதிர்காலத்தைப் பற்றியோ கவலையில்லை; முடிந்தவரை சுருட்டுவதுதானே அதன் பாலிசி. இப்படி நச்சுத் தன்மையைப் பரப்பும் தொழிற்சாலைகளுக்குக் கதவைத் திறந்து விட்டு விட்டு, 'புரட்சித் தலைவி ஆட்சியில் தொழிற்புரட்சி', 'வெளிநாட்டினர் கோடிக்கணக்கில் முதலீடு' என்றெல்லாம் முழு பக்க விளம்பரம் கொடுத்துக் கொண்டிருப்பார்கள்!" என்று ஒரே குரலில் சொல்கிறார்கள் எதிர்க்கட்சிக்காரர்கள்.

"கோவாவிலிருந்து இந்தத் தொழிற்சாலை கும்மிடிப்பூண்டிக்கு மாறியதில் பல மர்ம முடிச்சுகள் இருக்கின்றன" என்று சொல்கிறார் சுப்பிரமணியன் சுவாமி. இந்தத் தொழிற்சாலைக்கு தமிழக அரசால் கொடுக்கப்பட்ட சலுகைகளைப் பார்த்தால் சுவாமி சொல்வதில் நிஜம் இருக்கும் போலிருக்கிறதே என்று மண்டை குடைகிறது.

– நச்சுத் தன்மை இல்லாத, சுற்றுப்புற சூழலைப் பாழ்படுத்தாத தொழிற்சாலை என்பதை நிரூபிக்கும் முன்னரே வழக்கத்திற்கு மாறாக 300 ஏக்கர் நிலத்தைத் தாரை வார்த்தது.

– தொழிற்சாலைக்கு உபயோகப்படுத்தப்படும் உயர் அழுத்த மின்சாரத்துக்கு மற்ற தொழிலதிபர்கள் பொறாமைப்படும்படி மூன்றில் ஒரு பங்கு மட்டுமே மின்சாரக் கட்டணமாக நிர்ணயித்திருப்பது.

– மழைக் காலத்தில் மட்டுமே சில

நாட்கள் நீரோடும் ஆரணி ஆற்றிலிருந்து ஆழ்கிணறு போட்டு தினசரி 45 லட்சம் லிட்டர் நல்ல தண்ணீரைத் தொழிற் சாலைக்கு சப்ளை செய்ய ஒப்புக் கொண்டது.

– சுற்றுப்புறச் சூழல் அமைச்சகம், மற்றும் மாசு கட்டுப்பாடு வாரியம் ஆகியவற்றின் அனுமதி கிடைக்காத நிலையில், "இந்த தொழிற்சாலையால் சுற்றுச் சூழலுக்கு கேடு எதுவும் வராது'' என்று முதல்வர் சொல்லியிருப்பது.

சமூக நோக்கில் செயல்படும் சுற்றுச் சூழல் அமைப்புகளும் விறுவிறுப்பாகச் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றன. முதல் கட்டமாக, உள்ளூர் கிராம மக்களுக்கு அமையவிருக்கும் தொழிற்சாலையால் ஏற்படவிருக்கும் ஆபத்து எடுத்துச் சொல்லப்பட்டு, அவர்கள் போராடத் தயாராகி வருகிறார்கள்.

"நைலான் தயாரிக்கத் தேவைப்படும் ரசாயனங்களில் ஹெக்ஸாமெதிலின் டயமைன் மற்றும் அடிபிக் அமிலம் முக்கியமானவை. இவை மிகவும் நச்சுத்தன்மை வாய்ந்தவை. தொழிற்சாலைக் கழிவுகளின் மூலம் வெளிவரும் இந்த ரசாயனங்கள் கண்டிப்பாக சுற்றியுள்ள நிலங்களை மாசுபடுத்தி விடும். நிலத்தடி நீரைக் கெடுத்து விடும். அப்புறம் விவசாயத்துக்கே வாய்ப்பில்லை.

"இது தவிர, இந்த நிறுவனம் தொழிற்சாலை வளாகத்தில் அமைக்க இருக்கும் மின்சார உற்பத்தி நிலையத்திலிருந்து வெளிப்படும் சல்பர் டையாக்ஸைட் புகையால் பத்து கிலோ மீட்டர் சுற்றளவில் மக்கள் பாதிக்கப்படுவார்கள். அவர்களுக்கு நுரையீரல் சம்பந்தப்பட்ட நோய்கள் வரும். பொதுவாகவே ரசாயனத் தொழிற்சாலைகள் அமைக்க, கடலூர், தூத்துக்குடி போன்ற இடங்களில் ரசாயனத் தொழிற் பேட்டைகள் இருக்கின்றன. இந்தத் தொழிற்சாலை அந்த இடங்களில்தான் அனுமதிக்கப் பட்டிருக்க வேண்டும். மத்திய அரசின் சுற்றுச்சூழல் அமைச்சகம் இந்தத் தொழிற்சாலைக்கு அனுமதி கொடுக்கக் கூடாது" என்று உரத்த குரல் கொடுக்கிறார்கள் சுற்றுச் சூழல் ஆர்வலர்கள்.

தாபர் - டூபாண்ட் கம்பெனி மட்டும் சும்மா இருக்குமா என்ன? அமையவிருக்கும் தொழிற்சாலையில் எந்த கேடும் வராது என்று செய்தியைப் பரப்புவதில் முனைப்பாக நிற்கிறது. சில தனியார் நிறுவனங்களை வாடகைக்கு அமர்த்தி ஆய்வு நடத்தி ஒரு கெடுதலுமில்லை என்கிற அறிக்கைகள் கொடுக்க ஏற்பாடு செய்து வருகிறது.


• க. சுவாமி


• ஜெயலலிதா

"டன்லப், எம்.ஆர்.எப்., டி.வி.எஸ்., போன்ற டயர் தயாரிப்பு நிறுவனங்கள் சென்னையில் இருப்பதால் எங்கள் நைலானுக்கு நல்ல மார்க்கெட் இருக்கும். மேலும், துறைமுகம் இருப்பதால் இயந்திரங்கள் மற்றும் மூலப் பொருட்களை சுலபமாக இறக்குமதி செய்ய முடியும். நாங்கள் மிக மிக நவீனமான முறையில் நைலான் தயாரிக்கிறோம். தொழிற்சாலையிலிருந்து வெளியேறும் கழிவுகளில் 95 சதவீதம் recycle செய்யப்பட்டு மீண்டும் பயன்படுத்தப்படும். மீதி ஐந்து சதவீதம் கூட வளாகத்திற்கு வெளியே போகாது.

"மின் உற்பத்தி நிலையம் மூலம் வெளிவரும் புகையால் ஒரு பாதிப்பும் வராது. இதைவிட உற்பத்தித் திறன் மிகவும் அதிகம் கொண்ட எண்ணூர் மின்நிலையம் வெளியிடும் புகையாலேயே பாதிப்பு இல்லை என்கிற போது எங்களுடையது மிகவும் சிறிய மின் நிலையம். மேலும், நமது சாலைகளிலிருந்தும், ஏன் சமையல் அறைகளிலிருந்தும் வெளிவரும் புகை உண்டாக்கும் தொல்லைகளை விட, எங்கள் தொழிற்சாலை வெளிப்படுத்தும் புகையால் பெரிய தொல்லை ஏற்பட்டு விடாது" என்கிறார்கள் தாபர் - டூபாண்ட் நிறுவனத்தினர். ஆனால் கோவாவில் இருந்து கும்மிடிப்பூண்டிக்கு வந்த மர்மத்தை மட்டும் கூற மறுக்கிறார்கள். 'அங்கு திட்டம் தாமதம் ஆகும் போல இருந்தது' என்று வழுக்குகிறார்கள்.

இந்தச் சர்ச்சைகள் ஒருபுறமிருக்க, கும்மிடிப்பூண்டியில் தொழிற்சாலைக்காக ஒதுக்கப்பட்ட இடத்தில் மண் பரிசோதனை போன்ற பூர்வாங்க வேலைகள் துரிதமாக நடந்து வருகின்றன. 1997 இறுதியில் உற்பத்தியைத் துவக்கத் திட்டமிடப்பட்டிருக்கிறது.

"சுற்றுச்சூழல் ஆர்வலர்களும் மக்களும் போராட்டத்தை மேலும் தீவிரப்படுத்த வேண்டும்'' என்கிறார், கும்மிடிப்பூண்டியில் தொழில் நடத்தும் ஒருவர். "ஏனென்றால் எதிர்ப்பையும் மீறி டூபாண்ட் நிறுவனம் தொழிலகம் அமைத்தால் மக்களிடையே விழிப்புணர்ச்சி இருக்கிறது என்ற அளவுக்கேனும் உணர்ந்து மாசுக் கட்டுப்பாடு விஷயத்தில் சர்வஜாக்கிரதையாக, உஷாராக இருப்பார்கள் அல்லவா?"

— ப்ரியன்

# நல்ல மனைவியாக இருப்பது எப்படி?

'நல்ல கணவனாக நடந்து கொள்வது எப்படி?' என்று சில வாரங்களுக்கு முன்பு ஒரு கட்டுரையைப் பிரசுரித்தாலும் பிரசுரித்தோம். ஆண் குலத்திடமிருந்து ஒரே கடித மழை! 'எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்கிற டிப்ஸும் அறிவுரைகளும் எங்களுக்கு மட்டுந்தானா? அவ்விடத்துக்குக் கிடையாதா?' என்று கதறல் மயம்!

ஏன் இல்லை? ஒரு மனைவி கணவனிடம் எப்படியெல்லாம் நடந்து கொள்ள வேண்டும் என்று சிவபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறதென்று தெரியுமா?

'கற்புள்ள பெண், கணவன் சாப்பிட்ட பிறகே சாப்பிட வேண்டும்' என்ற சிம்பிள் நிபந்தனையில் ஆரம்பித்து, 'கங்கை போன்ற புனிதமான நீரைக் குடிக்க வேண்டும் என்று ஒரு பெண் கருதினால், கணவனின் பாதங்களைக் கழுவிய நீரைக் குடிக்கலாம். அப்படிக் கழுவிய நீர், எல்லா புனித நதிகளும் சங்கமமான புனித நீருக்குச் சமம்...' என்பது போன்ற அதிரடி அறிவுரை வரை பெரிதாகப் பட்டியலிடுகிறது சிவபுராணம்.

இதனை முப்பத்தேழு வயது பால கிருஷ்ணனிடம் விவரித்த போது சிரித்தார்...

"இப்படியெல்லாம் என் மனைவி நடந்து கொள்ள வேண்டுமென்று நான் எதிர்பார்ப்பதேயில்லை. இந்தக் காலத்தில் யாரும் எதிர்பார்க்க மாட்டார்கள்!" என்றார், பால கிருஷ்ணன்.

"அப்படி இவர் எதிர் பார்த்திருந்தாலும் என்னால் அப்படியெல்லாம் நடந்து கொள்ளவும் முடியாது. ஆனாலும் இவர் வருத் தப்படுகிற மாதிரியோ, முகஞ்சுளிக்கிற மாதிரியோ நான் முடிந்தவரை நடந்து கொள்வதில்லை..." என்றார், திருமதி கோமதி பால கிருஷ்ணன்.

பெரும்பாலான ஆண்கள் தாங்கள் ஒரு ராஜா மாதிரி என்கிற மனோநிலையில்தான் வீட்டில் அதிகாரம் செலுத்துகிறார்கள். அவர்கள் ராஜா ஆனாலும் மனைவியை ராணியாக நினைப்பதில்லை. ஒரு பணிப்பெண்ணைப் போல் பணிவிடை செய்ய வேண்டும் என்றே எதிர்பார்க்கிறார்கள். உங்கள் வீட்டில் எப்படி?

"நான் காலையில் எழுந்து பல் தேய்த்தவுடன் காப்பி தயாராக இருக்க வேண்டும். அதுவரையில் எனக்கு வேறு வேலை செய்யவே பிடிக்காது. காப்பி வர தாமதமானாலும் எனக்குக் கோபம் வந்து விடும். அப்போது நான் ராஜா மாதிரி ஒரு சர்வாதிகாரியாய் நடந்து கொள்வதும் உண்மைதான்!" என்கிறார், பாலகிருஷ்ணன்.

"அவர் எப்போதும் எனக்கு ராஜா தானே!" என்று தமாஷாகக் குறிப்பிடும் கோமதி, "காப்பி குடிக்கும் வரைதான் அப்படி. பிறகு பேப்பரை ஓர் அவசரப் பார்வை பார்த்து விட்டுக் குழந்தைகளை எழுப்பி, அவர்களை ஸ்கூல் புறப்பட வைப்பதற்கான எல்லா வேலைகளையும் அவர்தான் செய்வார். நான் சமைப்பதோடு சரி. குழந்தைகளைப் பற்றிக் காலையில் கவலையேபட மாட்டேன்!" என்கிறார்.

இவர்களைப் போல் ஒருவரையொருவர் சரியாகப் புரிந்து கொண்டு விட்டால் பிரச்னையே இல்லை. ஆனால், புரிந்து கொள்ளாமல், ஒவ்வொருவரும் தான்தான் உசத்தி என்று நினைத்துக் கொள்கிறபோது தான் பிரச்னையாகிறது. விட்டுக்

கொடுப்பது என்பது சுலபமான விஷயமல்ல. ஆனால், அன்போடு விட்டுக் கொடுக்க ஆரம்பித்தால் எதிர்த் தரப்பினரும் அதே போல் முன்வருவர். விட்டுக் கொடுப்பதை எப்படி சுலப மாக்கிக் கொள்ளலாம்...? முன்பு கணவன்மார்களுக்கு டிப்ஸ் வழங்கியது போல, இப்போது மனைவிமார்களுக்கும் சில டிப்ஸ் :



●● உங்கள் மீது உயிரையே வைத்திருந்த நேற்றைய காதலன் இன்று குற்றம் கண்டு பிடிக்கும் கணவனாக மாறி விட்டான். உங்களைச் சல சலக் கும் ஓடைகளைத் தாண்டி வரக் கை கொடுத்து உதவிய ஆடவன், நெருக்கடி மிகுந்த சாலைகளில் இடிபடாமல் காத்த வீரன் ஒரு சாதாரண பொத்தான் தைப்பதற்குக் கூட உங்கள் உதவியைத் தான் நாடுகிறான்! நீங்கள் உங்கள் கணவனின் சட்டைப் பொத்தான் களைத் தைப்பதாலோ, அல்லது சட்டைக் கிழிசலைச் சரிசெய்வதாலோ நீங்கள் அடிமையாகி விட மாட்டீர்கள். தன்னுடைய சொந்த வேலையைத் தானே செய்து கொள்வதற்கு அவருக்குச் சில நாட்கள் ஆகலாம்; பொறுத் திருங்கள். வேலைகளைப் பகிர்ந்து மெள்ள மெள்ள பழக்கப்படுத்துங்கள். அவருக்கு அடியோடு பிடிக்காத வேலைகளைச் செய்ய வற்புறுத் தாதீர்கள்.

●● அவ்வப்பொழுது கணவனின் அத்தை, மாமாக்கள் கொண்ட கூட்டம் ஒன்று உங்கள் வீட்டில் வந்து தங்க ஆரம்பிக்கும் போது முகஞ்சுளிக் காதீர்கள். உறவினர் கூட்டத்தைக் கவனிப்பதில் உங்கள் முழு கவனத் தையும் செலுத்துங்கள். இதனால் அவர் உங்களிடம் பேசக் கூட நேரம் கிடைக் காதபடி செய்யுங்கள். இப்படிச் சில சந்தர்ப்பங்கள் நேருகிற போது, அவர்களை உபசரிப்பதில் அவருக்கே நாட்டம் குறைந்து போய், உங்கள் மேல் தனி அன்பு சுரக்க ஆரம்பித்து விடும்.

●● இரண்டு பேர் ஒன்றாகச் சேர்ந்து வாழ்கிற போது, விருப்பு வெறுப்புகள் மோதிக் கொள்ள



"காதுல எறும்பு பூந்திடுச்சு."
"அப்புறம்?"
"சர்க்கரையைத் தட்ல கொட்டி, காதுகிட்ட காட்டினதும் வெளியே வந்திடுச்சு...."

- ஆர். வசந்தகுமார்

---

நேரிடலாம். இத்தனை நாட்களாக நீங்கள் உங்கள் விருப்பம் போலவும் அவர் தம்முடைய இஷ்டப்படியும் வாழ்ந்து வந்திருக்கிறீர்கள். இப்போது ஒன்றாக வாழ்வதில் தொடர்ந்து பல நெருக்கடிகள் ஏற்படலாம்! உதாரணத்திற்கு உங்கள் படுக்கையறை மின்விசிறி. அவருக்கு மின் விசிறி ஓடாமல் தூக்கமே வராது. உங்களுக்கோ அது போடும் சப்தம் காரணமாகத் தூங்க முடியவில்லை! என்ன செய்வது? அது சப்தம் போடாதிருக்க எண்ணெய் விட்டுப் பழுதுபார்க்கச் சொல்லுங்கள். மிகவும் குளிராக இருந்தால் போர்த்திக் கொண்டு தூங்குங்கள்.

●● அவர் தமது சக அலுவலர் ஒருவரின் மனைவியைப் பற்றிப் பெருமையாகப் பேசுகிறார். அவளது உபசரிக்கும் திறன் பற்றிப் பாராட்டுகிறார். "உங்களுக்கு எப்போதுமே அவள் மேல் ஒரு மயக்கம்" என்று கூறாதீர்கள். அவரோடு சேர்ந்து நீங்களும் அவளை பாராட்டுங்கள். அவளைப் போல் இருக்க உங்களுக்கும் விருப்பம்தான் என்று கூறுங்கள். உங்கள் கணவரின் முழு கவனமும் உங்கள் மேலேயே இருக்கும்.

●● ஏதோவொரு விவாதத்தின் போது உங்களது தாய் அல்லது தந்தை பற்றிக் குறைவாகப் பேசுகிறார்... உடனே நீங்களும் அவர் தாய் தந்தை பற்றிப் பேச ஆரம்பித்து விடாதீர்கள். அந்த நேரம் சிரித்து மழுப்பி விட்டு, பிறகு ஒரு நல்ல மனோநிலையில் அவர் இருக்கும் போது, நீங்கள் மனம் வருந்தியதை எடுத்துச் சொல்லுங்கள். அப்போது அவர் நிச்சயம் மன்னிப்புக் கேட்பார்.

●● நேற்று இரவு நடந்த சண்டையைப் பற்றி இருவருமே வேதனையில் இருக்கிறீர்கள். இருவருக்குமே மன்னிப்புக் கேட்க விருப்பம்தான். ஆனால் உங்களது தன்மானம் குறுக்கிடுகிறது; அவரே முதலில் சமாதானத் தூது விடட்டும் என்று காத்திருக்க வேண்டாம். அவரது பர்ஸுக்குள் ஒரு சிறிய காதல் கடிதத்தை வைத்து விடுங்கள். வேலைக்குக் கிளம்பும் போது அதை அவர் பார்ப்பார். அப்புறமென்ன! நிச்சயம் கூடல்தான்!

●● அவருடைய பெற்றோரை விட உங்கள் பெற்றோர் வசதிமிக்க செல்வச் சூழலில் வாழ்கின்றனர் என்பதற்காக உங்களது எல்லா விடுமுறை நாட்களையும் உங்களது பணக்காரப் பெற்றோருடன் கழிப்பதையே வழக்கமாகக் கொள்ளாதீர்கள். அவரது பெற்றோர் வறுமையில் வாடினாலும் அவருக்கு அவர்கள் முக்கியம் என்பதை மனதில் கொண்டு, விடுமுறைகளைச் சமமான அளவுக்கு இருதரப்புப் பெற்றோருடனும் செலவிடுங்கள்.

●● நீங்கள் ஒரு கூட்டுக் குடும்பத்தில் வாழ்கிறீர்கள். உங்கள் நாத்தனார்கள் குழப்பம் உண்டுபண்ணுகிறார்கள் என்றால், அதையெல்லாம் கணவரிடம் கூற வேண்டாம். நீங்களே சமாளித்துக் கொள்ளுங்கள். நடுநிலையோடு இருங்கள். நாளடைவில் உங்கள் கணவர் தாமாகவே அந்தக் குழப்பங்களுக்கான காரணகர்த்தாக்களைக் கண்டு கொள்வார். பிறருடைய குறைகளைப் பொறுத்துக் கொள்வதென்பது ஏமாளித்தனமல்ல; மனமுதிர்ச்சியின் அடையாளம் என்பதை நினைவில் கொள்ளுங்கள்.

- பிரின்ஸ்

அட்டையில் : கார்த்திக் - ஸ்ரீவித்யா

அட்டை வண்ணப்படம் :
கேமரா திருஞானம்

நன்றி : 'உங்கள் கணவரைச் சமாளிப்பது எப்படி?' பார்வதி கண்ணதாசன் பதிப்பகம், சென்னை - 17.

# Kalki Shopping Page



## SREE KRISHNA

**CUT PIECE COLLECTION PVT. LTD.**

**THE SHOP FOR WHOLE FAMILY**

39 GODOWN STREET.
MADRAS -1 PH. 589596

(WHOLE SALE DIVISION FOR CUT-PIECES & SAREES
MANUFACTURER -
WHOLE SALER - RETAILER
AVAILABLE AT EX-MILL PRICES)

**EXCLUSIVE MATCHING BLOUSES**

specialists in suiting, shirtings, cut-pieces, summer cotton sarees, madurai chungudi cotton, belgaum pattu silks, benaras silks, venkatagiri bengal cotton and churidar.

அருமையான டிசைன்களில்
Madurai sungudi sarees ரூ. 110/-
விலையில் வழங்கும் ஒரே
நிறுவனம்

## RAMACHANDRA SAREES,



(மதுரை சுங்குடி
புடவைகளின்
உலகம்)

37-B, Arya Gowder Road,
Postal Colony Bus Stop :
West Mambalam, Madras - 33.
Bus Route : 11R: 11J; 11E; 11D; 12G; 49J; 49; 5T; 9A

Ramachandra Sungudi Sarees No.1 தரம் எங்களின் விலாசத்தில் மட்டுமே கிடைக்கும்.
இன்னும் பிற: தரமான Venkatakiri, Bengal & கோரா Cottons புடவைகளும் கிடைக்கும்.

ஸ்ரீராமபிரானுக்குப் பாலம் அமைக்க சின்னஞ்சிறு அணிலும் மண் சுமந்தது
உங்கள் பொருளாதார முன்னேற்றத்துக்குப் பாலம் அமைக்க நாங்களும் உதவ முடியும்

## நடராஜ் ஃபைனான்ஸ்

தஞ்சையில் புதிய கிளை : 2-B செல்வம் நகர், மெடிகல் காலேஜ் ரோடு, ராஜப்பா நகர், தஞ்சை - 613 007

V. ரவி B.A., (கிளை மேலாளர்) | நடராஜ் குரூப் கம்பெனிகள் | எஸ். நடராஜன் (செயல் இயக்குநர்)

கிளை திறப்பை முன்னிட்டு தஞ்சையிலும், சென்னையிலும் டெபாஸிட்தாரர்களுக்கு ஒரு கிராம் தங்கக் காசு (22 காரட்) வழங்குவது மேலும் நீடிக்கப்பட்டுள்ளது.

மினிமம் டெபாஸிட் ரூ. 10,000 காலம் 12 மாதங்கள்

**வட்டி 24% P.A. பரிசு 4%+1% பென்ஷனர்**

12 மாதங்கள் 24 மாதங்கள் 36 மாதங்கள் 48 மாதங்கள்

• சீட்டு குரூப்பில் சேர்கிறவர்களுக்கு வெள்ளிக்காசு, மற்றும் பல்வேறு பரிசுகள் • 36 மாதங்களுக்கு ரூ. 12,000 டெபாஸிட் செய்து 24 மாதங்களில் 3 சவரன் தங்கம் பெறும் திட்டம் • இரட்டிப்புத் திட்டம் • பண்ணைவீடு திட்டம் •



**CALL : 4342098, 4840150**

**NATARAJ FINANCE & INVESTMENTS**
NATARAJ CHITS (TAMILNADU) PVT LTD.,
NATARAJ ESTATES–FARM HOUSE PROMOTERS
"Shanthi Complex", 3rd Floor, 26-Ranganathan St.,
T. Nagar, Madras-600 017. B.O. KANCHEEPURAM-1.



CHIT & FINANCE


OIL MILLS



EXPORTS


FARM HOUSE


PUBLICATIONS


# Kalki Shopping Page



1995 ஜூலை 30
யுவ ஆடி 14
மலர் : 53
இதழ் : 52

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.



## ஊழலை ஒழிக்க வழிசொன்னவர்!

இன்றைய இளம் தலைமுறையினர் பலருக்கு க. சந்தானம் அவர்களைப் பற்றி அதிகம் தெரியாது. ஆனால், இன்று எந்தவொரு பிரச்னைக்கும் குரல் கொடுத்து இளைஞர்களால் போராட முடிகிறதென்றால், அதற்கு அவர்கள் க. சந்தானத்துக்குத்தான் நன்றி சொல்ல வேண்டும்.

எம்.ஏ.,பி.எல். படித்து விட்டு வழக்கறிஞர் தொழிலில் ஏராளமாகச் சம்பாதித்து வந்த சந்தானம், அதைக் கைவிட்டு விட்டு சுதந்திரப் போராட்டத்தில் இறங்கினார். காந்தி ஆசிரமத்தில் வெறும் ஐம்பது ரூபாய் சம்பளத்துக்கு மேனேஜராகப் பணிபுரிந்தார்.

தியாகமே வாழ்க்கை முறையாக இருந்த ஒரு காலகட்டத்தில் சந்தானம் தமது செயல்கள் குறித்துப் பெருமைப்பட்டுக் கொள்ளவில்லை. சுதந்திர இந்தியாவில், எம்.பி., அமைச்சர், கவர்னர் என்று எத்தனையோ முக்கியமான பதவிகளை வகித்தது குறித்தும் அவர் பெருமைப்படவில்லை.

அவருக்குப் பெருமையும் பெருமிதமும் மகிழ்ச்சியும் அளித்த சம்பவம் அலாதியானது.

ஒருமுறை சத்தியாகிரகத்தில் ஈடுபட்டிருந்த போது, நேருவும் சந்தானமும்




கைது செய்யப்பட்டனர். போலீஸ்காரர்கள் ஒரே விலங்கினால் நேருவின் வலக்கரத்தையும் சந்தானத்தின் இடக்கரத்தையும் பிணைத்தார்கள். இந்த 'ஒருங்கிணைப்பை'த்தான் சந்தானம் தமது வாழ்வின் மிகப் பெரிய பெருமை யாகக் கருதினார்.

ஜவாஹர்லால் நேருவுக்கும் இச் சம்பவம் பெருமிதத்தை அளித்தது. சந்தானத்தின் அறிவாற்றலும் நேர்மையும் அவரை அந்த அளவுக்குக் கவர்ந் திருந்தன.

சுதந்திரம் வரப் போவது உறுதியான கட்டத்தில், சந்தானத்தின் அறிவாற் றலைப் பயன்படுத்திக் கொண்டார் நேரு. கட்சிகளும் கட்சித் தொண்டர் களும் உருப்படியான, ஆக்கபூர்வமான முயற்சிகளில் ஈடுபட்ட காலம் அது!

சுதந்திர இந்தியாவுக்குத் தேவையான அரசியல் சாசனத்தை உருவாக்கு வதற்காக, உலகின் இதர ஜனநாயக நாடுகளின் அரசியல் சாசனங்கள் அனைத்தையும் அலசி, ஆராய்ந்து அறிக்கை தயாரிக்கும் பொறுப்பு க. சந்தானத்துக்குத் தரப்பட்டது.

சந்தானம் கொடுத்த அறிக்கையின் அடிப்படையில்தான் நமது அரசியல் சாசனம் வடிவமைக்கப்பட்டது. அச் சாசனத்தை உருவாக்க, அரசியல் நிர்ணய சபை நிறுவப்பட்டு, விவாதங்கள் நடந்து கொண்டிருந்த காலகட்டத் திலும் இரண்டு மிக முக்கியமான விஷயங்களைச் சுட்டிக்காட்டினார் சந்தானம்.

முதலாவது, காந்திஜி வலியுறுத்திய கிராம ராஜ்ஜியத்துக்குச் சாசனத்தில் வழிசெய்யப்படவில்லை என்பது. கிராம சுயாட்சிக்கு மாநில அரசுகள் வழி




வகுக்க வேண்டும் என்பதை அரசியல் சாசனத்தில் சேர்க்கச் செய்தார். அப்படி அவர் அன்று செய்திராவிட்டால், 'அக்டோபரில் பஞ்சாயத்துத் தேர்தல் நடக்கும்' என இன்று ஜெயலலிதா அறிவித்திருக்க மாட்டார்! (இம்முறையாவது நடத்திக் காட்டுவார் என நம்புவோம்)

இரண்டாவது, அடிப்படை உரிமைகள் குறித்த அத்தியாயம் அரசியல் சாசன முன்வடிவில் இருக்கவில்லை. அதனைக் கட்டாயமாகச் சேர்க்க வேண்டும் என்று வலியுறுத்திச் சேர்க்க வைத்தவர் சந்தானம். அவர் அதைச் செய்ததனால்தான் இன்று பேச்சுரிமை, கருத்து சுதந்திரம் போன்ற பொக்கிஷங்களை நாம் அனுபவிக்கிறோம்.

இந்திய ஜனநாயகத்தின் ஒரு தூண் என்று சொல்லக்கூடிய க. சந்தானத்தின் நூற்றாண்டு இது. (பிறப்பு : ஜூலை 14) இந்த நேரத்தில், அவர் முன்வைத்த மற்றொரு முக்கிய சிபாரிசையும் நினைவுபடுத்திப் பார்க்கலாம் :

லஞ்ச ஊழல் அதிகம் இல்லாத ஒரு காலகட்டத்திலேயே - ஊழல் ஒழிப்பு கமிட்டி ஒன்று அரசால் நிறுவப்பட்டது. அந்த கமிட்டிக்குத் தலைமை வகிக்கக்கூடிய நேர்மையாளர் என்ற நோக்கில் பொறுப்பு சந்தானத்திடம் விடப்பட்டது.

அரசியல் கட்சிகள் எல்லாம் தங்கள் வரவு-செலவுகளைத் தணிக்கைக்கு உட்படுத்தி பொது மக்களின் பார்வைக்கு வைக்க வேண்டும் என்பது அப்போது சந்தானம் செய்த சிபாரிசுகளில் ஒன்று.

நாட்டில் லஞ்ச ஊழல் கணிசமாகக் குறைவதற்கு இந்த ஒரு சிபாரிசைச் செயலாக்கினாலே போதுமே!

"மிஸ்டர் வாட்சன்! கொஞ்சம் மேலே வர முடியுமா?"

கூப்பிட்டவர் கிரகாம்பெல். டெலிபோனைக் கண்டுபிடித்த மகானுபாவர். வீட்டு மாடியிலிருந்து, கீழே இருந்த நண்பருக்குச் செய்யப்பட்ட, உலகத்தின் முதல் தொலைபேசி அழைப்பு அது.

"வரேம்ப்பா" என்று பதில் சொல்ல வாட்சனுக்கு வாய்க்காமல் போயிருந்தால்...

"சாயந்திரம் அஞ்சு மணிக்குக் கடற்கரையில் கண்ணகி சிலைப் பக்கம் சந்திக்கலாமா?" என்று நீங்கள் காதலிக்கு ஃபோன் செய்ய முடியாது. "அங்கே சுண்டல் நல்லா இருக்காது. வள்ளுவர் சிலை பக்கம் போங்க" என்று யாரும் கிராஸ்டாக்கில் இலவச ஆலோசனை தர முடியாது... வானத்தில் செயற்கைக் கோள்களின் எண்ணிக்கை கணிசமாகக் குறைந்திருக்கும்...

டெலிபோனுக்கும், செயற்கைக் கோளுக்கும் என்ன சம்பந்தம்?

அண்ணாசாமி, இதோ சென்னை அசோக்நகரிலிருந்து, அகமதாபாத்திலிருக்கும் தன் சகலைக்கு ஃபோன் செய்கிறார்.

"நவஜீவன் எக்ஸ்பிரஸ்லே நம்ப நாணு வர்றான்.. ரெண்டு பாட்டில் மாகாணிக் கிழங்கு ஊறுகாய் கொடுத்தனுப்பியிருக்கேன்... வாங்கிக்கும்..."

தலைபோகிற இந்தச் சமாசாரம் எப்படி அசோக்நகரிலிருந்து ஆமதாபாத் போகிறது?

அண்ணாசாமியின் குரல் மின்காந்த அலைகளாக அசோக்நகர் டெலிபோன் எக்சேஞ்சை அடைகிறது. அங்கேயிருந்து சமீபத்திய மைக்ரோவேவ் கோபுரம். அப்புறம் வரிசையாக அந்த மாதிரி கோபுர தரிசனம்... அகமதாபாத்தில், சகலை வீட்டில் மின்காந்த அலை மீண்டும் அண்ணாசாமியின் ஜலதோஷக் குரலாக உருமாறுகிறது.

பெரிய பெரிய ஆண்டன்னாக்களோடு அங்கங்கே நீண்டு நெடிதுயர்ந்து நிற்கும் மைக்ரோவேவ் கோபுரங்கள் வரும் முன்னால், அதாவது இருபது இருபத்தைந்து வருடம் முன்னால்... ஊருக்கு ஊர் கம்பி இழுத்துக் கம்பம் நட்டுத்தான் தொலைபேசி இணைப்பு இருந்தது.

அடைமழை பெய்து வெள்ளம் வந்தால் கம்பிக்கு ஆபத்து. ஏதாவது கிளர்ச்சி என்றால் முதலில் கம்பத்தைத்தான் பிடுங்கிச் சாய்ப்பார்கள்.

மைக்ரோவேவ் தொலைத் தொடர்பு ஏற்பட்டதற்கு அப்புறம் இந்தச் சங்கம் எல்லாம் ஒழிந்தது. மைக்ரோவேவ் கோபுரங்களில் அமைந்த ஆண்டன்னாக்கள், அனுப்பப்படும் காந்த அலைகளைப் பிடித்து, பலப்படுத்தி அடுத்த கோபுரத்துக்கு அனுப்பும் காரியத்தைச் செவ்வனே செய்வதால், வெளியூர் என்றால் தொண்டையைக் கிழித்துக் கொண்டு கத்த வேண்டியதில்லை...

## சுஜாதா

கம்பி டெலிபோன் மைக்ரோவேவ் ஆனதற்கு இடைப்பட்ட காலத்தில்... சரியாகச் சொன்னால் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து ஐம்பதுகளிலும், அறுபதுகளிலும் வல்லரசுகள் வானத்தைப் பார்க்க ஆரம்பித்திருந்தார்கள். பூமியைச் சுற்றி வர செயற்கைக் கோள்களை அனுப்பினார்கள். இதற்கு உந்துதல், 'நீயா, 'நானா' போட்டி மட்டுமில்லை... அத்தனை உசரத்திலிருந்து சவுகரியமாக வேவு பார்க்கலாமே என்ற நல்லெண்ணமும் கூடத்தான்.

வேவு பார்ப்பது இருக்கட்டும், செயற்கைக் கோளை உபயோகப் படுத்தி உருப்படியாக ஏதா






வது செய்யலாமா என்று பார்த்த பொழுது, சட்டென்று தோன்றியது தகவல் தொடர்பு தான்.

மைக்ரோவேவ்

# சாட்டிலைட்!

என்ற நுண்ணலை மூலம் ஆயிரக்கணக்கான கிலோ மீட்டர் இடைவெளியுள்ள இடங்களை இணைக்கலாம்தான். அதற்கு அப்பால்? நாடு விட்டு நாடு? கண்டம் விட்டுக் கண்டம்? நடுவே பரந்து விரிந்த கடல்... உயரமான மலைகள்...

தரையில் இருக்கிற மைக்ரோவேவ் கோபுரத்தை விட, வானத்தில் சுற்றி வருகிற செயற்கைக்கோள் இந்த மாதிரி சூழ்நிலைகளுக்குச் சிலாக்கியம் என்று பொறி தட்டியது.

ஆனால் ஒரு சங்கடம்...

மைக்ரோவேவ் கோபுரம், நின்ற இடத்தில் நட்டமரமாக நிற்கிறது. இந்த செயற்கைக் கோள் பூமியைச் சுற்றி வருகிற சமாசாரம். வானத்தில் எங்கேயாவது 'நில்' என்று பிடித்து நிறுத்தவா முடியும்?

யோசித்தார்கள். வழி பிறந்தது. கிட்டத்தட்ட இப்படி...

அண்ணாசாலையில் பக்கத்தில் பக்கத்தில் போகிற இரண்டு பல்லவன் பஸ்கள். இரண்டும் ஒரே வேகம். ஒன்றில் ஜன்னலோரம் நீங்கள். மற்றதில் உங்கள் நண்பர்.

ஒரே வேகத்தில் இரண்டு பஸ்ஸும் நகரும் வரை, நிலையாக அமர்ந்து இருப்பது ப்போல் தோன்றும். நீங்கள் அரட்டை அடித்துக் கொண்டு கூடப் போகலாம்.. இதே போல, பூமி தன்னைத்தானே சுற்றுகிற வேகத்தில், செயற்கைக் கோளை பூமியைச் சுற்றி வர விட்டால்... பூமியின் பார்வையில் செயற்கைக் கோள் 'நிற்கும்.'

பூமிக்கு மேலே 'நட்டக் குத்தலாக' இப்படி செயற்கைக் கோள் 'நிற்க' வேண்டும் என்றால், பூமத்தியரேகைக்கு மேலே முப்பத்தாறாயிரம் கிலோ மீட்டர் உயரத்தில் அதைக் கொண்டு செலுத்த வேண்டும். வினாடிக்கு இரண்டாயிரத்து அறுநூறு மீட்டர் வேகத்தில், பூமியைச் சுற்ற அது இருபத்து நாலு மணி நேரம் எடுத்துக் கொள்ளும்.

இந்த உயரத்திலிருந்தாலும் செயற்கைக் கோள் பூமியை முழுசாகப் பார்க்க முடியாது. ஏதோ நாற்பத்து ரெண்டு சதவிகிதம் போல அதன் 'கண்ணில்' படும். 'ஓங்கி உலகளந்த' ஒற்றை சேடலைட் எதுவும் ஏவ முடியாது. 'அமெரிக்காவுக்கு மட்டும்', 'ஆசியா மட்டும்' என்று சின்னதான பரப்பளவில் ஆளுமை செலுத்தும் செயற்கைக் கோள்களே சாத்தியம்.

இன்றைக்கு உள்ள தொழில்நுட்பத்தின் படி, முன்னூற்று அறுபது டிகிரி விரிந்த முழு வெட்டவெளியில் நாலு டிகிரிக்கு ஒன்றாக மொத்தம் தொண்ணூறு செயற்கைக் கோள்களைத்தான் நிறுத்த முடியும். ஆனால், வெவ்வேறு ப்ரீகுவென்சிகளில் இயங்கும் ஒன்றுக்கு மேற்பட்ட செயற்கைக் கோள்கள் ஒரே விண்வெளி இடத்தில் நிற்கத் தடையில்லை. எனவே தொண்ணூறு தொன்

ளாயிரமாகி... இப்போது வானமே எல்லை.

பன்னாட்டு அரசுகள் தவிர, பான் ஆம் (PANAM), ஒரியன் அட்லாண்டிக், கொலம்பியா கம்யூனிகேஷன் என்று தனியார் நிறுவனங்களும் செயற்கைக் கோள்களை மேலே உலவ விட்டிருக்கின்றன.

செயற்கைக் கோள் எப்படித் தகவல் தொடர்புக்குத் துணை போகிறது?

அசோக்நகர் அண்ணாசாமியின் தொலைபேசி உரையாடலையே எடுத்துக் கொள்வோம். ஒலியலைகள் மின்காந்த அலைகளாகி, மைக்ரோவேவ் கோபுரத்தின் வழியாகப் போகாமல், பூமி நிலையம் என்ற 'எர்த்ஸ்டேஷன்' வழியே அலைக்கதிர்களாக வானில் படர்ந்து செயற்கைக்கோளை அடையும். இது 'அப்லிங்க்' (UPLINK) எனப்படுவது.

செயற்கைக் கோளில் இருக்கும் 'டிரான்ஸ் பாண்டர்' (Transponder), என்ற கருவிகள் மின்காந்த சிக்னல்களை உள்வாங்கி, அதை வலுவாக்கி, ப்ரீகுவென்சி மாற்றிக் கீழே அனுப்பும். இது 'டௌன் லிங்க்.' (Down link).

அகமதாபாத்திலோ, வேறு எங்கேயோ அமைந்த பூமி நிலையம் அதைப் பெற்று, வேறு தரை இணைப்புக்கள் மூலமாகப் போக வேண்டிய இடத்துக்கு அனுப்பி வைக்கும்.

பூமி நிலையங்களின் ஆன்டென்னாவின் விட்டம் மூன்றிலிருந்து முப்பது மீட்டர் வரை, செயற்கைக்கோளின் சக்தியைப் பொறுத்து அமையும். சக்தி அதிகமாக ஆக, ஆன்டென்னா சைஸ் குறையும்.

செயற்கைக் கோள்களின் மூலம் தொலைபேசி இணைப்பு உருவாக்குவதில் உள்ள சுவாரசியமான விஷயம், பக்கத்துத் தெருவுக்குத் தொடர்பு கொள்ளவும் அண்டார்டிக்காவுக்கு இணைப்புக் கொடுத்துத் தகவல் அனுப்பவும் கிட்டத்தட்ட ஒரே செலவுதான் தொலைபேசி இலாகாவுக்குப் பிடிக்கும்.

தொலைபேசித் தொடர்புக்கு மட்டுமில்லை... வெவ்வேறு இடங்களில் இயங்கும் கம்ப்யூட்டர்களை இணைத்துத் தகவல் பரிமாறிக் கொள்ளவும் செயற்கைக் கோள்கள் வழி செய்யும்.

ஒரு கம்ப்யூட்டர் தகவல் நாடாவில் உள்ள தகவலைத் தரை மூலம் அனுப்ப ஏழு மணி நேரம் பிடிக்கும் என்றால், சேடலைட்டில் முப்பதே வினாடி!

தொலைபேசி உரையாடலையும், கம்ப்யூட்டர் தகவல் பரிமாற்றத்தையும் ஒரே நேரத்தில் ஏகமாகக் கையாளத் திறமையானவை செயற்கைக் கோள்கள் - அதாவது நாற்பதாயிரம் உரையாடல்கள்... ஐநூறு கம்ப்யூட்டர் தகவல் பரிமாற்றங்கள் என்று கலந்து கட்டியாக...

விசாட், யூசாட் என்ற சின்னஞ்சிறிய ஆன்டென்னாக்களை ப்ரீப்கேசில் தூக்கிக்கொண்டு, 'கம்ப்யூட்டர் இணைக்கலியோ' என்று டை கட்டிய ஆசாமிகள் அலைந்து கொண்டிருக்கிறார்கள்.

வரும் நாட்களில், நகர்கிற ரயிலில், விமானத்தில் இருந்தெல்லாம் செயற்கைக் கோள் மூலம் தொடர்பு கொள்ள வசதி செய்து தருவதாக வாக்குத் தத்தம் செய்கிற 'மொபைல் டெலிபோன்' கம்பெனிகள் தலைகாட்டப் போகின்றன.

தகவல் தொடர்பைப் பற்றி மாய்ந்து மாய்ந்து சொல்வதால், செயற்கைக் கோள்கள் இதற்கு மட்டும்தான் என்றில்லை.

சதா பூமியையும், கடலையும் கவனித்துப் பார்க்கும் விசேஷமான காமிராக்கள் கொண்ட செயற்கைக் கோள்கள் பூமிக்கு அருகேயே வலம் வருகின்றன. இந்த 'ரிமோட் சென்சிங் சேடலைட்டுகள்' பிடித்த புகைப்படங்கள் உடனுக்குடன் பூமிக்கு அனுப்பப்பட்டு, கம்ப்யூட்டர் உதவியோடு அலசி ஆராயப்படுகின்றன.

'கடலில் இந்த இடத்தில் பச்சை நிறம் மட்டுப்படுகிறதே... பாசியைச் சாப்பிட்டுக் கொண்டு கீழே மீன் கூட்டம் இருக்கலாம்' என்ற ரீதியில் பெறப்பட்ட முடிவுகள் கடலில் சஞ்சரிக்கும் மீனவர்களுக்கு அனுப்பப்படுகின்றன.

'செயற்கைக் கோள் மூலம் பெறப்பட்ட வரைபடம்' என்று தொலைக்காட்சியில் செய்திகள் முடிக்கும் முன்னால் காட்டுகிறார்களே... அந்தப் படமும் இப்படி எடுத்ததுதான்.

இன்னும் பல பயன்கள்.

செயற்கைக் கோள்கள் மட்டும் இல்லாமல் போனால் கேபிள் டீ.வி.க்காரர்கள்



"பால்காரர் கடிதம் எழுதினா எப்படி முடிப்பார் சொல்லு?"

"மற்றவை 'நீரில்'னு!"

"இரு மீன்கள் லெட்டர் எழுதினால் எப்படி ஆரம்பிக்கும்?"

"ஜலம். ஜலமறிய ஆவல்!"

- சந்தியூர். ஏ. கோவிந்தன்

ஒட்டுமொத்தமாகக் கடையைக் கட்டி இருப்பார்கள்.

செயற்கைக் கோளை டெலிவிஷனுக்கு உபயோகப்படுத்துவது 1964-லேயே ஆரம்ப மாகி விட்டது. அந்த வருஷத்து டோக்கியோ ஒலிம்பிக் விளையாட்டுக்கள், சின்காம்-3 செயற்கைக் கோள் வழியாக அமெரிக்கா வில் நேரடியாக ஒளிபரப்பப்பட்டன.

தகவல் தொடர்பு செயற்கைக் கோள் களில் 'சானல்'களை வாடகைக்கு எடுத்துக் கொண்டு 'விண்ணிலிருந்து உங்கள் வீட்டுச் சின்னத் திரையில்' சினிமா நட்சத்திரங் களைக் கொண்டு வந்து நிறுத்துகின்றன, உங் கள் அபிமான மூவி. கம்பெனிகள் உங்கள் தெருக்கோடி கேபிள் ஆபரேட்டர் மூலம்.

ஆளாளுக்கு செயற்கைக் கோளை ஏவி வானத்தில் 'டிராபிக் ஜாம்' உருவாகாமல் தடுக்க சர்வதேச அமைப்புக்கள் உள்ளன. 'இந்த ப்ரீகுவென்சியில், இந்த இடத்தில் வானத்தில் செயற்கைக் கோளை நிறுத்த லாம்' என்று அவை சொன்னாலும், 'சர்த் தான் போய்யா...' என்று இஷ்டப்பட்ட இடத்தில் வான வண்டியைப் பார்க் செய் கிற சைனா போன்ற அடாவடி திலகங் களும் உண்டு.

ஆயுசு விஷயத்தில் மனிதன் போலத் தான் செயற்கைக் கோளும். மேலே போன துமே அல்பாயுசில் இறந்து போகிற துரதிர்ஷ் டம் பிடித்த கோள்களில் எல்லாக் கருவி களும் ஸ்தம்பித்து விடும்.

'செத்துப் போன' செயற்கைக் கோள் களும் உலகைச் சுற்றித்தான் வரும். 'ஸ்கை லாப்' போன்று சில நேரங்களில் சில செயற் கைக் கோள்கள் புவிஈர்ப்பு விசையில் அகப் பட்டுக் கீழே விழும்!

எல்லோரும் சுறுசுறுப்பாக செயற்கைக் கோள்களை ஏவி விட, இந்தியா மட்டும் பின்தங்குமா என்ன?

'ஆரியபட்டா'வில் ஆரம்பித்து, பலவாறு முன்னேறி, போன வருடம் நாமே வடிவ மைத்த பி.எஸ்.எல்.வி ஏவுகணை மூலம் ஐ.ஆர்.எஸ்.பி ரெண்டு மேலே போனது. இந்த வருடம்? ஐ.ஆர்.எஸ். நாலு சியும் நாலு டியும் மேலே போக உள்ளன.

யார் கண்டது... நாளை பெப்சிகாரர் களும், கோக்கோகோலாகாரர்களும் முறையே 'ஐஸ்வர்யா', 'சுஷ்மிதா' என்று சாடலைட் விடலாம்!

'சபாஷ்... சரியான போட்டி...' என்று சிலாகித்தபடி நீங்களும் நானும் ஜில்லென்று பானைத் தண்ணீர் குடிக்கலாம்!

— இரா. முருகன்

## கார்ட்டூனிஸ்ட் கணபதி!



**'Ze'ev'** இவர் இஸ்ரேல் நாட்டின் பிரபல அரசியல் கார்ட்டூனிஸ்ட். சமீபத் தில் புதுடில்லியிலும் பம்பாயிலும் அவருடைய கார்ட்டூன் கண்காட்சி நடைபெற்றது. பம்பாய், இஸ்ரேல் தூதரக அலுவலருக்கு 'ஜீ'எவ்' தமது வாழ்த்துத் தெரிவித்தார். அதில் குறிப் பிடத்தக்க அம்சம், துதிக்கையில் தூரி கையைத் தாங்கிய நர்த்தன விநாயகர் உருவில் அவர் தமது உருவத்தையே வரைந்திருந்ததாகும். அவரது பெரும் பாலான கார்ட்டூன்களில், தமது உருவத் தையே அடையாள முத்திரையாக வரைந்திருப்பார்.

ஆதாரம் : 'இஸ்ரேல் டுடே'

— ஜானாஜி

''புகை பிடிக்கும் பழக்கத்தை நிறுத்த வேண்டும் என்று விரும்புபவர் கள், அகத்திக் கீரையை நிறைய சாப் பிட்டு வர வேண்டும்! புகை பிடிப்ப தால், மூச்சுக் குழலிலும் இருதயத்திலும் படியும் விஷத்தன்மையை அதிஅற்புத மாக அகற்றும் தன்மை வாய்ந்தது அகத்திக் கீரை!''

- ''போதைப் பழக்கங்களை நிறுத்துவது எப்படி?'' என்ற நூலிலிருந்து...

— பி. ராஜசேகரன்





# பணம் பண்ணலாம் வாங்க!

'உங்கள் முதல் செலவு சேமிப்பாக இருக்கட்டும்' என்ற தொடரைத் தனது விளம்பர வாசகமாகப் பயன்படுத்தி வருகிறது ஒரு நிதி நிறுவனம். இந்தப் 'பொன் மொழி'யையே 'பண மொழி'யாக இந்தத் தொடரின் வாசகர்களுக்குச் சொல்லலாம்.

சேமிக்க ஆரம்பிக்கும் எல்லோருமே முதன் முதலில் சேவிங்ஸ் பாங்க் அகவுன்ட் ஆரம்பிப்பார்கள். இந்த அகவுன்டுக்குத் தற்போது வங்கிகள் 4.5 சதவிகிதம் வட்டியே அளிக்கின்றன. குறைந்தபட்சமாக ஐந்நூறு முதல் ஆயிரம் ரூபாய் வரை வங்கிக் கணக்கில் வைத்திருக்க வேண்டும் என்பது நிபந்தனை.

ஒவ்வொரு மாதமும் பத்தாம் தேதி தொடங்கி அந்த மாத இறுதி வரை வட்டி கணக்கிடப்பட்டு அகவுன்ட்தாரரின் கணக்கில் சேர்க்கப்படுகிறது. இதனால் நாம் வங்கியில் போடும் தொகையைப் பத்தாம் தேதிக்கு முன்னால் செலுத்தி விடுவது நல்லது. அதே போல், மாத இறுதியில் கணிசமான தொகையை வெளியே எடுக்காமல் இருப்பதும் நல்லது.

இதையெல்லாம் விட முக்கியமான விஷயம் : மிக அதிகமான தொகையை எஸ்.பி. கணக்கில் வைத்திருப்பது நல்லதல்ல என்பதே. உடனடி மற்றும் ஒருசில எதிர்பாராத அவசரச் செலவுகளுக்கெனத் தேவைப்படக்கூடிய குறைந்தபட்ச தொகையை மட்டும் வைத்துக் கொண்டு, உபரித் தொகையை வேறு லாபகரமான விஷயங்களில் முதலீடு செய்ய வேண்டும்.

சிலர், பெருமைக்காக அயல்நாட்டு வங்கிகளில் அகவுன்ட் வைத்துக் கொள்வதுண்டு. இதில் வேறு சில அனுகூலங்கள் இருந்தாலும் குறைந்தபட்சமாக பத்தாயிரம் ரூபாய் அகவுன்டில் வைத்திருக்க வேண்டும் என்பது இந்த அயல்நாட்டு வங்கிகளின் விதி! அந்தத் தொகை கணக்கில் இல்லாவிட்டால் 'சர்வீஸ் சார்ஜ்' விதித்து கணக்கிலிருந்து கழித்துக் கொள்கிறார்கள்! நடுத்தர வர்க்கத்தினருக்கு இது காசையும் கொடுத்துத் தேளையும் கொட்டிக் கொள்கிற கதைதான்!

எந்த வங்கியில் கணக்கு வைத்திருந்தாலும், நாம் செலுத்தும் தொகைகள் கணக்கில் சேர்க்கப்படுகின்றனவா என்றும் நாம் எடுக்கும் அல்லது செக் மூலம் செலவழிக்கும் தொகை கணக்கில் காட்டப்படுகிறதா என்றும் பாஸ் புக்கில் கட்டாயம் சரிபார்க்க வேண்டும். அதே போல் வட்டித் தொகை உரிய காலத்தில் கணக்கில் சேர்க்கப்படுகிறதா என்று பார்ப்பதும் மிக அவசியம். இந்த விஷயங்களை பாங்கில் தவற விட்டால் நாம்தான் சுட்டிக்காட்டி நேராக்க முடியும். இதில் கவனக்குறைவாக இருந்தால் நஷடப்பட வாய்ப்பு இருக்கிறது. எனவே மாதா மாதம் வீட்டுக் கணக்கு பார்ப்பது போல் வங்கிக் கணக்கையும் சரிபார்ப்பதை வழக்கமாகவே செய்து கொள்ளலாம்.

வங்கி, சேமிப்புக் கணக்குக்குத் தரும் வட்டி மிக மிகக் குறைவு என்ற புகார் வலுவடைந்து வருகிறது. ரிசர்வ் வங்கி இது விஷயத்தில் சீர்திருத்தம் கொண்டு வர வேண்டும் என்ற கோரிக்கையும் எழுந்துள்ளது. ஆனால் வங்கிகளோ, வாடிக்கையாளர்கள், சேமிப்புக் கணக்கை கரன்ட் அகவுன்ட் போல் கையாள்கிறார்கள் என்று குற்றம்சாட்டி வருகிறது.

வட்டி விஷயத்தில் உள்ள அதிருப்தி காரணமாகவோ என்னவோ, வங்கிகள் பெற்ற டெபாஸிட் தொகையின் அளவு சென்ற வருடத்தை விட இந்த வருடம் கணிசமாக உயரவில்லை! பொது மக்கள் தங்கள் பணத்தை, கூடுதல் வருமானம் தரும் வேறு முதலீடுகளுக்குத் திருப்பி விட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்பது தெளிவாகத் தெரிகிறது.

இந்த ஆரோக்கியமான போக்கு நீடிக்கும் என்ற நம்பிக்கையுடன் இத் தொடரை முடிக்கிறேன்.

மீண்டும் சந்திக்கும் வரை......

(பணம் பெருகட்டும்!)

**வி. கோபாலன்**


GOKULAM
Look! A magazine for us!


STORIES!
COMICS!


Hey! They Publish Children's articles!
FEATURES! POEMS! PUZZLES!
GOKULAM


Mummy! Please buy us GOKULAM!


Hmm! How much does it cost?
Only Rs.5!
Only Rs.5!
GOKULAM


YOUR CHILDREN WILL LOVE GOKULAM. BUY THEM A COPY TODAY!

# திருச்சி துணுக்ஸ்



## அனுபவம் கைகொடுக்கும்!

நான் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த போது, சக மாணவர் ஒருவர் மயிலாடுதுறையிலிருந்து ரயிலில் வந்து படித்துக் கொண்டிருந்தார். அவர் ரயில் பயணத்துக்காக டிக்கெட்டோ, மாணவர்களுக்கான சலுகை பாஸோ வாங்கவே மாட்டார். தினமும் வித்தவுட்தான்! இத்தனைக்கும் அவர் வசதிக் குறைவான குடும்பத்தைச் சேர்ந்தவரும் அல்ல. நாங்கள் காரணம் கேட்டபோது, 'இப்படி வருவதில்தான் ஒரு த்ரில் இருக்கிறது!' என்று சொல்லிவிட்டார். அக்கம்பக்கத்து ஊர்களுக்குச் செல்கிற போதும் வித்தவுட்தான். டிக்கெட் பரிசோதகர் வரும்போது வழக்கம்போல் படுசாமர்த்தியமாகத் தப்பியும் விடுவார்! படிப்பெல்லாம் முடிந்து அண்மையில் நான் சென்னைக்கு ரயிலில் பயணம் செய்த போது மீண்டும் அந்த நண்பரைச் சந்தித்தேன். வித்தவுட் நபராக அல்ல; ரயில் டிக்கெட் பரிசோதகராக அவர்! என்னால் சிரிப்பை அடக்கவே முடியவில்லை. அப்போது அவர் சொன்னார்: "எப்படியெல்லாம் டிக்கெட் வாங்காமல் ஏமாற்றிப் பயணம் செய்வது என்பது எனக்கு ரொம்பவும் அத்துபடி. அதனால் என்னிடம் யாரும் ஏமாற்ற முடியாது!"

- ஐ. மனோகர் இன்பராஜ்,
திருச்சி - 14.

## போதும் பெண்!

எங்கள் மாவட்டத்தில் சங்கம்பட்டி என்னும் கிராமம். அங்குள்ள முத்துவேல் என்னும் விவசாயிக்கு ஆண் குழந்தை வேண்டுமென்று கொள்ளை ஆசை. முதலில் பெண்தான் பிறந்தது. கவிதா என்று பெயர் வைத்தார். இரண்டாவதும் பெண்தான்! கௌசல்யா என்று பெயரிட்டார். மூன்றாவதாவது ஆணாக இருக்காதா என்ற நிலையில் அதுவும் பெண்ணாகப் பிறக்க கௌரி என்று பெயரிட்டு, நான்காவது குழந்தைக்காகக் காத்திருந்தார். அதுவும் பெண்ணாக, கலைச்செல்வி என்று பெயரிட்டு விட்டுக் கடைசி எதிர்பார்ப்பாக ஐந்தாவது குழந்தைக்குக் காத்திருந்தார். அதுவும் இவரை ஏமாற்றி விட்டுப் பெண்ணாகவே பிறக்க, அலுத்துப் போன இவர், 'போதும் பெண்' என்று அந்தக் குழந்தைக்குப் பெயரிட்டுவிட்டு ஆண் குழந்தை ஆசையையே கைவிட்டு விட்டார்!

- துரை. ஏ. இரமணன், துறையூர்.

போதும் பெண்!

## வால் நீளமா, வடைமாலை நீளமா?

ஆஞ்சநேயர் கோயில்களில் 108, 1008 என்று வடைமாலை சாற்றுவது வழக்கம். திருச்சி மேலப்புலிவார் ரோட்டில் உள்ள ஸ்ரீ சஞ்சீவி ஆஞ்சநேயர் கோயிலில் ஸ்ரீ சஞ்சீவி அனுமன் பக்த குழுவினர் அனுமான் ஜெயந்தி உற்சவம் கொண்டாடி வருகின்றனர். இரண்டடி உயரமுள்ள அனுமானுக்குக் கடந்த ஆண்டு 450 அடி நீளமுள்ள வடைமாலை சாற்றினார்கள். 14,700 வடைகள். தவிர, 70 அடி நீளமுள்ள துளசி மாலையும் அணிவிக்கப்பட்டது. தீபாராதனைக்குப் பிறகு வடைகளை எடுத்துப் பக்தர்களுக்கு விநியோகம் செய்யவே நான்கு மணிநேரம் பிடித்தது.

## தமிழுக்குப் பெருமை சேர்த்தவர்!

கடந்த பொங்கலிலிருந்து தமிழில் தந்தி முறை அமல்படுத்தப்பட்டது. தமிழ் தந்திக்கான அடிப்படைச் சங்கேத சப்தங்களைக் கண்டுபிடித்த பெருமை சிவலிங்கம் என்பவரையே சாரும். தபால் துறையில் பணிபுரிந்து கொண்டே சுமார் முப்பதாண்டுகள் முயற்சி செய்து சங்கேத சப்தங்களைக் கண்டு

பிடிப்பதில் வெற்றி கண்டார். இவர் வீட்டின் பெயரே 'தமிழ் தந்தி இல்லம்' என்பதுதான். எனவே, தமிழிலான முதல் தந்தியை இவருக்கு அனுப்பிப் பெருமைப் படுத்தினார்கள்.

- வி. எல். வெங்கடேஸ்வரன்,
வானாடி (திருச்சி மா.வ.)

**விவரமான கிராம மக்கள்!**

வெள்ளையர் ஆண்ட காலம். வெள்ளைக்கார சப்-கலெக்டரின் ஜமாபந்தி நடந்து கொண்டிருந்தது. அதில் தஞ்சை மாவட்ட கிராமம் ஒன்றின் பட்டா மணியம் ஒரு கோரிக்கை வைத்தார் : "துரை அவர்களே, எங்கள் கிராமத்தைப் பக்கத்து மாவட்டமான திருச்சிராப்பள்ளி மாவட்டத்தோடு சேர்த்துவிட்டதில் கிராம மக்களே கொதித்துப் போயிருக்கிறார்கள்!" என்றார். ஆச்சரியமான சப்-கலெக்டர், "ஏன்?" என்றார். "திருச்சி மாவட்டம் கந்தக பூமி. வெயில் தாங்காது. அதனால் தான் எங்கள் கிராம மக்கள் திருச்சியோடு இணைய மறுக்கிறார்கள்!" என்றார், பட்டா மணியம்.

"அப்படியானால், உத்தரவை ரத்து செய்துவிடுகிறேன்!" என்று சப்-கலெக்டர் பிரச்னையைச் சுருக்கமாக முடிக்க, "அப்பாடா! தப்பித்தோம். இனி வெயிலின் உஷ்ணம் நம்மைத் தாக்காது!" என்று பெருமூச்சு விட்டனர் கிராம மக்கள்!

- ஜி. விசுவநாதன், திருச்சி-20.

# போதும் பெண்!

**ஜோக்!**

**"ரொம்ப உயரமா கட்-அவுட் வைக்காதீங்கன்னு சொன்னதைக் கேட்டாயா?"**

**"அதுக்கு என்ன?"**

**"இப்பப் பாரு... அம்மா போற ஹெலிகாப்டர் எப்படி கட்-அவுட்களில் திணறி, வளைஞ்சு வளைஞ்சு ஆட்டோ மாதிரி போவதை!"**

-ரேவதி நந்தகுமார், வாலிகண்டபுரம்,
திருச்சி (மா.வ.)



**ஆகா!**
**என்ன பொருத்தம்!**

திருச்சியிலுள்ள இரண்டு ஊர்களின் பெயர்கள் : 'கிராப்' பட்டி, 'குடுமி'யாமலை!

**கமிஷனர் தெய்வம்!**

வக்கீலாகப் பணிபுரியும் என் உறவினர் ஒருவர் வீட்டுக்குச் சென்றிருந்தபோது, அவரது மேஜையில் சுவாமி படங்களுடன் கூடவே திருச்சி மாநகராட்சி கமிஷனர் சுவரண்சிங் படமும் இருப்பதைப் பார்த்து அதிர்ச்சி அடைந்தேன். கேட்டபோது, "கமிஷனர் சுவரண்சிங் ஆக்கிரமிப்புகளை அகற்றுவதால், சம்பந்தப்பட்டவர்கள் 'ரிட்', 'ஸ்டே' என்று வக்கீல்களை நாடுவதால் வக்கீல்களுக்கு ஏகப்பட்ட கேஸ் கிடைக்கிறது. அதனால்தான் அவரையும் வக்கீல்களான நாங்கள் தெய்வமாக மதிக்கிறோம்!" என்று போட்டாரே ஒரு போடு!

- சம்பத்குமாரி, திருச்சி - 4.

**"வரவர பக்கிரிக்குத் திமிர் அதிகமாகிக்கிட்டே போவுது!"**

**"ஏன்? மாமூல் தரமாட்டேன்கிறானா?"**

**"இல்ல. பாங்க் கொள்ளைக்குப் போறோம். ஆள் பத்தலை, நாலு போலீஸாரை மப்டியில் அனுப்பி வைக்க முடியுமான்னு கேட்கிறான்!"**

**பேரணியில் நடந்த பெருந்தன்மை!**

அண்மையில் நடந்து முடிந்த ம.தி.மு.க. மாநாட்டின் முதல் நாள் பேரணி. பேரணி முடியும் தறுவாயில் மேலப்புத்தூரில் ஒரு சம்பவம். அலங்கார ஊர்திகள் வந்து கொண்டிருந்தபோது, சிறிதுநேர இடைவெளியில் ஊர்திகள் வரவில்லை. அந்த நேரம் பார்த்து திருச்சி ஏர்போர்ட் செல்லும் தனியார் டவுன் பஸ் இடையில் புகுந்து கொள்ள, தொண்டர்கள் சூழ்ந்து கொண்டனர். 'எப்படிடா நீ இடையில் வரலாம்?' என்று கூச்சலிட்டபடியே முன்பக்கக் கண்ணாடியை உடைத்தனர். நடத்துனருக்கு அடி+உதை! பயணிகளிடம், 'வை. கோ. வாழ்க!' என்று சொல்ல வைத்துக் கீழே இறக்கி விட்டனர். நடத்துனரும் ஓட்டுனரும் 'வை. கோ. வாழ்க!' என்று சொல்லி மீதமுள்ள கண்ணாடியைத் தக்க வைத்துக் கொண்டனர்.!

- ஹெ. முனீர் அஹமது,
திருச்சி - 1.

# என்னுயிரும்

17

சொர்ணலக்ஷ்மிக்கு கதிரேசனை மயக்க வேண்டும் என்ற ஆசை எழுந்த போதே கொஞ்சம் வெட்கமாகவும் சங்கடமாகவும் இருந்தது. இது சரியோ என்ற கேள்வியும் எழுந்தது. ஒரு பெண் நல்ல புருஷனுக்கு ஆசைப்படறது தப்பா என்கிற சமாதானமும் ஏற்பட்டது. 'கதிரேசன் நல்லா பழகறாரு, கண்ணியமா நடந்துக் கிறாரு, அவரைப் பார்த்ததும் அய்யோ இப்படி ஒரு புருஷன் நமக்குக் கிடைச்சா நல்லா இருக்குமேன்னுதான் தோணுது. இது தப்பா?' என்கிற எண்ணம் வந்தது.

'ஏய் ஆளு அன்பா இருக்காருன்னா நீ லவ் பண்ணுற? நாப் பது ஏக்கர் ஏலக்காய் எஸ்டேட் பார்த்த உடனே பரபரன்னு ஆவி போயிடுச்சி உனக்கு. அதை கருட்டிக்கிணும்னுதான் அன்பு காதல்னு டபாய்க்கிற. இந்த கதிரேசன் இன்னும் கருப்பா பல் எடுப்பா இருந்திருந்தாலும் உனக்குக் காதல் வந்திருக்கும். தொந் தியும் தொப்பையுமா இருந்தாலும் பிரியம் பொங்கியிருக்கும். கணக்கு பண்றேனு தெளிவா சொல்லிட்டு போயிடுங்க. காதல் கீதல்னு கஷ்டப்படாதீங்க.' மனசில் ஒரு பக்கம் வசைபாடிற்று.

'உன் கணக்கு என்னன்னு நான் சொல்லட்டுமா. நீங்க ஆகா, ஓகோன்ற பகவதியக்கா இருபத்தி மூணு வயசில சுமாராத்தான் இருந்தாங்க. அப்படி ஒண்ணும் எடுப்பா மிடுக்கா இருந்திடலை. அவங்களைத் தேடிக்கினு வந்து செட்டியார் கல்யாணம் பண்ணி இவ்வளவு பெரிய எஸ்டேட்டும் அதுக்கு உண்டான கொத்துச் சாவியும் கொடுத்திருக்காருன்னா ஒரு சாமர்த்தியம்தானே. பொம்பிளை சாமர்த்தியம்தானே. பேச வேண்டிய நேரத்தில் பேசி, கொஞ்ச வேண்டிய நேரத்தில் கொஞ்சி எல்லாமும் செஞ்சி ஆம்பளை இஷ்டப்பட்டபடி இருந்து ஒண்ணும் ஒண்ணும் இரண்டுன்ற கணக்குத்தானே. இதுல அசிங்கம் என்ன...'

'கடவுளே, கடவுளே நீ ஏண்டி இப்படி கெட்டுப் போனே?' மனது இன்னொரு பக்கம் முடியைப் பிடித்து உலுக்கிற்று. 'நீ இப்ப நினைச்சியே, அதுக்கு என்ன பேர் தெரியுமா? ரொம்ப அசிங்கமான பேர். என் வாயால சொல்லக் கூடாது.'

'எத்தினி நான்டி ஒரு ஆளை மயக்குவ, அப்படி ஒரு ஆளை மயக்கி அந்த ஆள் மயக்கத்திலேருந்து எழுந்துட்டா அந்த ஆள் மயங்கினது தெரியாது. நீ மயக்கினதுதான் தெரியும். மயக்குற பொம்பளைக்கு மதிப்பு கம்மி, மயக்க வெட்கப்படுகிற பொம்ப ளைக்கு மதிப்பு அதிகம்.'

'இன்னா சொல்ற நீ, பகவதி அக்கா மயக்காத பொம் பளைன்றியா... கோடானு கோடி பொம்பளைங்க குடித்தனம் பண்ணி குழந்தை பெத்து இருக்காங்களே, யாருமே பவுடர் பூசி, பூ வைச்சதில்லைன்றியா... ஆம்படையானைப் பார்த்து நமுட்டுச் சிரிப்பு சிரிச்சதில்லைன்றியா... இது அத்தினியும் மயக்குறவிதம் தானே, குடித்தனக்காரங்க பண்றதுதானே... இது அசிங்கம்னா உலகமே அசிங்கம்தான்.' பதிலுக்கு ஆசை மனம் கடுகடுத்தது.

'முளைச்சி மூணு இலை விடல... அதுக்குள்ள புருஷனைப் பத்திப் பேசறியா? எல்லா பொம்பளையும் கெட்டுப் போனவன்ற மாதிரில்ல பேசுற... அது தப்பு. புத்தி போடு. புருஷன் கூட சல்லாபம் பண்றதுதான் குடித்தனம். ஆனா அது மட்

பாலகுமாரன்

டுமே இல்லை. அதுவும் ஒண்ணு, புரியுதா? குடித்தனத்திலே சரச சல்லாபமும் ஒண்ணு. அது சல்லிவேர். ஆணிவேர் என்னா தெரியுமா? பொறுப்பு. ஆம்படையான் செய்யுற வேலைல பாதி பங்கு வகிக்கிறது. புருஷன் பானை பண்ணா களிமண் பிடிக்கிறது. புருஷன் பயிர் பண்ணா நாத்து நடறது. புருஷனுக்கு எஸ்டேட் இருந்தா அதுல வேலை செய்யுறவங்களுக்காக வேலை செய்யுறது. ஏலக்கா பறிக்க இருபது பேர் போனா, இருபத்தஞ்சி டீ பின்னால அனுப்பறது. ஆபீஸ் போற புருஷனுக்கு அறியாத பொம்பளை எப்படி உதவி செய்றதுன்னு கேட்கறியா, உன்னை மாதிரி நோனாவட்டைங்க கேட்கும். அந்த ஆள் களைச்சு வரச் சொல்ல காபி தண்ணி குடுத்துட்டு கால் மணி நேரம் பேசாம இருக்கிறது. நல்லதா நாலு விஷயம் பேச ஆரம்பிக்கிறது. ஆம்படையானும் வேலைக்குப் போறான், பொண்டாட்டியும் வேலைக்குப் போறா. அப்ப் என்னா பண்றதுன்னு உன் குறுக்கு புத்தி கேட்கும். ஏன்னா உனக்கெல்லாம் பதிலை விட கேள்வியே முக்கியம்! ஏதாவது கேட்டுக்கிட்டே இருக்கணும். புரிஞ்சிக்கிறதுக்குப் பொறுமை வேணும். பொறுமையிருந்தா தானா புரியும். கேள்வியே இல்லாம போகும். புருஷன் பொண்டாட்டி இரண்டு பேரும் வேலைக்குப் போய்ட்டு வந்தா உள்ள நுழைஞ்ச அரை மணி நேரம் பேசாம இருந்து அவங்க அவங்க வேலையைக் கவனிக்கணும்; களைப்பு, எரிச்சலை பேச்சில காட்டாத இருக்கணும். வேலையில பங்கு இருக்கிறது மட்டுமில்ல, பெத்த புள்ளைங்களை நிமித்தி வைக்கிறதுல பொம்பளை



பங்கு அதிகம். புள்ளைங்கள பொம்பள பாத்துக்கிறானா ஆம்பளைக்கு ரொம்ப சந்தோஷம்.

"நான் பேசறது எல்லாம் நல்ல ஆம்பளைங்களப் பத்தி. தறுதலைங்கள நான் ஆம்பளைங்களாகவே நினைக்கல. அந்த தறுதலைங்கள மயக்கவும் முடியாது. அவனுங்க தின்னுட்டு துப்புறவங்க. நான் என்ன சொல்ல வரேன்னா படுக்கையில மயக்கறதுக்கு யோசனை பண்றதுக்கு பதிலா, புருஷனோட வேலையில கூட நின்னு, புள்ளைங்கள கைதூக்கி விட்டு, அவங்களைப் பெத்தவங்களுக்கு மரியாதை பண்ணி, அவன் துக்கத்துல வலியில ஆறுதல் சொல்லி, முன்னேறதுக்கு யோசனை சொல்லி, இட்தா, வல தான்னு யோசிக்கறப்ப, நீ யோசனை பண்ணி... இதுக்கு நடுவுல சரச சல்லாபம் பண்ணா, மகளே ரொம்ப மரியாதை உனக்கு. அந்த பொண்டாட்டிய எதுனால யும் யாரலயும் அசைக்க முடியாது.

'உங்கக்கா பகவதி, செட்டியாருக்கு இரண்டாவது பொம்பளை. ஆனா அவளுக்கு எவ்வளவு மதிப்பு, எத்தினி செல்வாக்கு, இத்தனை கவுரவத்தை அவ மயக்கியா தக்க வச்சருப்பா? ஆம்பளை இல்லாத போது இந்த எஸ்டேட்டை நாய் மாதிரி காவல் காத்திருப்பா. அந்த மண் ஏன் சரிஞ்சது... இந்தக் கிளை ஏன் வளைஞ்சது... ஆயிரம் கேள்வி கேட்டிருப்பா. அத்தனைக்கும் பதில் சொல்லிருப்பா... கணக்கு, வழக்கு காட்டியிருப்பா.

'அடடா, இந்த காரியம் செய்யாத மதுரைக்கு போய்ட்டேன். ஏகப்பட்ட நஷ்டம் வரும்னு நினைச்சேன். நீ மறக்காம செஞ்சு ஆயிரம் ரூபாய் லாபம் காட்டிட்ட. வெரி குட். நீ இருக்கிற வரைக்கும் ஏலக்கா எஸ்டேட் பத்திக் கவலை இல்லை?' சந்தோஷமாய் செட்டியார் சாப்பிட உட்கார்ந்திருப்பார்.

'நாப்பத்தேழு வயசாயிடுச்சு. வியாதின்னு இல்லாட்டாலும், ஆடுகால் தசை இழுத்தா மாதிரி வலிக்குது. பகவதி நிருகித் திருகி பிடித்து விட, தைலம் போட்டு தேய்த்து விட, தசை வலியைக் காட்டிலும் பிடித்து விட்ட வலியில் செட்டியார் சுகமாய் தூங்கியிருக்கக்கூடும். புருஷனும் மனைவியும் ஏலக்காய் எஸ்டேட் சுத்தி வருகிற போது, வேலையில் தெளிவு பெற பகவதி கேள்வி கேட்டிருக்கக்கூடும். நாப்பது ஏக்கர் நடந்த களைப்பில் வெந்நீர் போட்டுக் குளித்து விட்டு, விளக்குப் போட்டு கணக்கு எழுதி விட்டு, சப்பாத்தியும் பாலும் சாப்பிட்டு விட்டு, இருட்டில் குளிரில் வானம் பார்த்து உட்கார்ந்து விட்டு, தூக்கம் கண்ணை இழுக்கும் போது உள்ளே போய் மெத்தை கட்டிலில் சாய்ந்து கம்பளியைப் போர்த்திக் கொண்டு, 'உனக்கு வாங்கினு வந்த புடைவை புடிச்சிருக்கா?' பகவதியைத் தடவியபடி செட்டியார் கேட்கிற போது சரசம் சல்லாபம், மயக்குதல், மயங்குதல் எல்

---

**சீ**னத் தலைவர் டெங்சியோ பெங் தனியார் துறை எம்முறையில் செயல்பட்டாலும் சரி, அது மக்கள் நலனை நிச்சயம் பாதிக்கும் என்பதை விளக்க, "யானைகள் ஓடிப் பிடித்து விளையாடினால் என்ன, மிதிபடும் புல்தரைக்கு இரண்டும் ஒன்றுதானே?" என்றார்.

சமீபத்தில் பிற கம்யூனிஸ்ட் நாடுகளைப் போலவே சைனாவிலும் அரசு கெடுபிடிகளைத் தளர்த்தி தனியார் முயற்சிகளுக்கு ஆதரவு அளிக்கிறதல்லவா? அது பற்றி கேட்ட போது, "பூனை கறுப்பானால் என்ன, பழுப்பு அல்லது வெளுப்பானால் என்ன? எலியைப் பிடிக்கிறதா என்பதுதானே கேள்வி?" என்றார்.

— அ. ஷண்முகசுந்தரம்





**ஒ**ருவன் கடுமையாக புத்தரைத் திட்டினான். அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்த புத்தர், "அப்பா, ஒருவன் அளிப்பதை நாம் ஏற்றுக் கொள்ளவில்லை எனில் அது யாருக்குச் சொந்தம்?" என்று கேட்டார். "அளித்தவனுக்கே" என்றான் அவன்.

புத்தர், "நீ இதுவரை எனக்கு அளித்த வசவுகளை நான் ஏற்றுக் கொள்ளவில்லை" என்றார்.

ஆதாரம் : 'தெய்வத்தை நம்புங்கள் நிம்மதி கொள்ளுங்கள்' என்ற நூல்.

தகவல் : எம். இராதாகிருஷ்ணன்

ஸ்ரீ காஞ்சி பூஜ்ய ஸ்ரீ பரமாச்சார்யாள் அவர்கள்
அத்வைத வித்யாசார்யாள் மஹாராஜா ஸாஹேப் பகவான்
ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களின் வம்சத்தில் உதித்தவர்களே.

மஹான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதரவர்களால், 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு, தொடர்ந்து நடந்து வரும் வேத பாடசாலையை ஸமிதியானது தாய் போல் இயங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 130 மாணாக்கர்கள் வேதாத்யாயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஓர் நாள் உணவளிக்க, உணவு வகையினை அனுசரித்து சுமார், முறையே ரூ. 500/-, ரூ. 750/- அல்லது ரூ. 1000/- ஆகிறது. இந்தத் தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ. 5000/-, ரூ. 7500/- அல்லது ரூ. 10,000/- மூலதனம் ஏற்படுத்தியோ, அவ்வப்போது தொகை அனுப்பியோ, ஒரு குறிப்பிட்ட தினத்தில் உணவளிக்கும் கைங்கர்யத்தில் பங்கு கொள்ளக் கோருகிறோம். நன்கொடை அனுப்ப வேண்டிய பெயரும் முகவரியும் :

அத்வைத வித்யாசார்யா மஹாராஜா ஸாஹேப்
ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி,
42, காமாக்ஷி ஜோசியர் தெரு, கும்பகோணம் - 612 001.

செக் (or) டிராப்ட் முதலியவைகளை A.V.M.S.G.D.P.S. ஸமிதி என்ற பெயருக்கு அனுப்பலாம்.

*****இந்த நன்கொடைக்கு 80-G விதியின்படி வருமான வரிவிலக்கு உண்டு*****

குறிப்பு : எம்மிடம் வேத, வைதிக, ப்ரயோக நூல்கள் யாவும் கிடைக்கும். Rs. 3/- க்கு தபால் தலை அனுப்பி எமது Catalogue ஐ பெற்றுக் கொள்ளலாம்.

லாம் நடக்கும்.

"நான் தூங்கட்டுமா, காலைல மதுரை போகணும்..."

"எத்தனை மணிக்கு எழுப்பணும்னு சொன்னா நல்லா இருக்கும்."

"ஏழு மணிக்கு எழுப்பேன், எட்டரை, ஒன்பதுக்கா கிளம்புறேன்."

ஏழு மணிக்குச் செட்டியார் கண் விழிக்கிற போது தித்திப்பு வாசனை மூக்கைத் தாக்கும்.

"என்னா பகவதி பண்ற?"

"கேரட் அல்வா."

"யார் தொண்டையில் இறங்கும் இது?"

"உங்களுக்குப் புடிக்காது தெரியும். குழந்தைங்க சாப்பிடும்; அதுலயும் கதிரேசனுக்குப் புடிக்கும்."

"எங்கப்பரானை... யாரும் தொடப் போறதில்ல. மூணு நாள் குளிர் பொட்டியில் இருந்துட்டு வீடு பெருக்கறவளுக்கு போகப் போவுது."

"தொலைச்சிடுவேன்னு சொல்லுங்கோ. கண்டமேனிக்குத் திட்டுவேன்னு சொல்லுங்கோ. - லீவு நான்ல மலைக்கு வந்தா சோறு கிடைக்காது. அவிச்ச கிழங்குதான் தருவேன்னு சொல்லுவேன்."

கேரட் அல்வா, மலை வாழை, தேன் பாட்டில், ரோஜா செடி, காப்பிக் கொட்டை, தேயிலை பாக்கெட், ஏலக்காய்ச் சரம், கீரை முள்ளங்கி, நீலக்கலர் கோஸ், அரை அடி நீள சந்தனக் கட்டை, ஆள் வள்ளிக் கிழங்கு எல்லாமும் காரில் ஏற்றப் பட்டிருக்கும்.

"இன்னாத்துக்குடி இதெல்லாம். வண்டி ஓடற வரைக்கும் இதெல்லாம் பிரச்னை இல்லை, எங்கினா நின்னுடுச்சு... அத்தனையும் எரிச்சலாயிடும்."

மதுரைக்கு செட்டியார் போய் சாமான்களும் இறங்கின பிறகு பார்க்கும் இடங்களில் எல்லாம் பகவதி நிறைந்திருப்பாள். கேரட் அல்வாவை வீடு போட்டி போட்டு விழுங்கும், தேனை பகிர்ந்து அளிக்கும், செடியை கொல்லையில் நடும். கோஸ் உணவில் கலக்கும், கிழங்கை சகலருக்கும் வழங்கும். அந்த நேரமெல்லாம் பகவதியோடு பேசியது ஞாபகம் வரும். கூடியது ஞாபகம் வரும்.

"அப்பா சின்னம்மா ஏதோ கேட்டதாச் சொன்னீங்களே, வாங்கிட்டு வந்துடட்டுமா?" - கதிரேசன் நினைவுபடுத்துவான்.

"எனக்கு அல்வா கிளற எல்லாம் முடியாது. தெருக்கோடி அய்யரு வீட்டம்மாக் கிட்ட, வத்தல் ரெண்டு கிலோ, ஊறுகாய் மூணு பாட்டில் சொல்லியிருக்கேன். நமக்குன்னு எண்ணெய் கம்மியா, காரம் கம்மியா போடறாங்க. அடுத்த தடவை போறப்ப அவகிட்ட கொடுங்க." - ஆச்சி நினைவு படுத்துவாள்.

ரப்பர் வளையம், கலர் ஹேர்ப்பின், கண்ணாடி வளையல், கண் மை பென்சில், ஒட்டும் பொட்டு என்று பலதும் பார்க்கும் போது செட்டியாருக்குப் பகவதி ஞாபகம் வரும். அப்படி ஞாபகம் வைத்திருப்பதற்குப் பெயர்தான் மயக்கம். அந்த நிலைக்குப் புருஷனை தள்ளியிருப்பதற்குப் பெயர்தான் மயக்குதல்.

சொர்ணலக்ஷ்மி புடைவையை எடுத்துச் செருகிக் கொண்டு, கதிரேசனுடைய துணிகளைப் படுசுத்தமாய் துவைத்தாள். உலர்ந்ததும் மின்சார இஸ்திரி பெட்டியால் தேய்த்து மடித்தாள். அவன் அறையைப் பெருக்கினாள். படுக்கையைத் தட்டிப் போட்டாள். ஈரத்துணி போட்டுத் துடைத்தாள். வீட்டு வாசலுக்கு மஞ்சள் குங்குமம் எழுதினாள். வெந்நீர் அடுப்புக்கு கட்டை பிளக்கத் துவங்கினாள். மழை மறுபடியும் பயமுறுத்திய போது, பாலில்லாத காப்பியில் சிறிது சர்க்கரை போட்டு அவனைத் தேடிக் கொண்டு போனாள். வீட்டிலிருந்து நூற்றைம்பது அடி தூரத்தில் அவன் வாங்க ஆசைப்பட்ட எஸ்டேட் விளிம்பில் கதிரேசன் நின்று பார்த்துக் கொண்டிருந்தான். அவன் கண்களில் அதிகமாகக் கவலை இருந்தது. அவள் காப்பியுடன் வருவதை உடனே உணரவில்லை. உணர்ந்த பிறகும் அவள் வருகையை மதிக்கவில்லை. வெப்ப அறைக்குள் சிக்கித் தவித்தது அவனை இம்சித்துக் கொண்டிருந்தது.



"இங்கிலாந்திலேருந்து வந்த நிதித் துறை அதிகாரி தாமஸ் கிளார்க் டெல்லி போனார், கல்கத்தா போனார்... சென்னைக்கு வரலியே...?"

"இங்க வந்தா பக்கிங்ஹாம் அரண்மனையை வாங்கித் தரச் சொல்லி வற்புறுத்து வாங்களோன்னு பயந்திருப்பார்...!"

— வி. எஸ். கிருஷ்ணமூர்த்தி

(தொடரும்)

**பா**ல் காய்ச்சியாகி விட்டது. எல்லாம் வந்து இறங்கி விட்டன. மாடி போர்ஷன். பின்னால் வேப்பமரக் காற்று. ஆள் உயர ஜன்னல்கள். கதவைத் திறந்தால் பிய்த்துக் கொண்டு போனது.

பூமா உபரியாய் ஒரு தடவை கணேசனை இறுக்கிக் கொண்டாள். ('ஒன்ஸ் மோர்!')

தனிக்குடித்தனம். அருமையான வீடு. சொன்னவுடன் ஏற்பாடு செய்து விட்டான். அருமைக் கணவன்.

"இழே நம்மை மாதிரியே ஒரு ஜோடி. கூட ஒரு அம்மா... ஃப்ரெண்டு புடிச்சுக்க. ஃபோன் இருக்கு. ஓனர் வேற. பின்னால உதவும்..." என்றான், ஆபீஸ் கிளம்பிப் போகுமுன்.

வீட்டைப் பார்க்க வரும் போது பக்கவாட்டு வழியில், மாடிப்படி ஏறிப் போய்ப் பார்த்தார்கள். இதே போர்ஷனுக்கு வீட்டுக்குள் இருந்தும் மேலே வர படிகள் இருந்தன. இரு வழியாகவும் இறங்க வசதியாக ஒரு கதவு.

**கா**லிங்பெல்லை அழுத்துவதா? 'அம்மா' என்று கூப்பிடுவதா என்று யோசிப்பதற்குள் அந்த வயதான பெண்மணி வெளியே வந்தாள்.

இருவரின் முகத்திலுமே அதிர்ச்சி.

"நீ...ங்களா?"

"நீ...யா?"

மேலே என்ன பேசுவதென்று புரியவில்லை.

"எ..ன்ன வேணும்?" என்றாள் பாகீரதி.

"மாடி போர்ஷன்ல குடி வந்திருக்கேன். நீங்க...?" என்றாள் பூமா.

"என் பையன் வீடுதான்."

"ஓ, சித்ரா உங்க மருமகதானா? வீடு பார்க்க வந்த போது அவங்கதான் இடத்தைக் காட்டினது."

"வாடகைக்கு விடணும்னுதான் மேலே கட்டினது. அவ ஏற்பாடுதான். அவ ஆபீஸ்ல லோன் வாங்கி..." - இதை ஏன் இவளிடம் சொல்ல வேண்டும் என்று பாதியிலேயே நிறுத்தி விட்டாள்.

"வரேன்."

**பூ**மா மேலே வந்த பிறகும் திகைப்பு அடங்கவில்லை. என்ன விசித்திரம். இந்த வீட்டுக்கா குடி வந்திருக்கிறாள். ஒரு வருஷம் இருக்குமா. இதே பாகீரதி தன் மகன் சுரேஷுடன் இவளைப் பெண் பார்க்க வந்ததும், நிச்சயதார்த்தம் ஏற்பாடு செய்த பிறகு, காரணமே சொல்லாமல், நிராகரித்ததும்...

அப்பா ஆடிப் போய் விட்டார்.

மறுநாள் காலை நிச்சயதார்த்தம். எல்லாம் தயார். உறவினர் கூட்டம் வேறு. ஃபோனில் தகவல். 'கேன்சல் பண்ணிருங்க. நாங்க வரலே.'

ஏனென்று கேட்டால் பதிலே இல்லை.

அண்ணன் சற்று முன்கோபி.

'எல்லாம் ஏற்பாடு செஞ்சப்புறம். வேணாம்னா என்ன அர்த்தம்?'

'இங்கே பாருங்க. நாளைக்கு நாங்க வரலேன்னு நீங்க ஃபீல் பண்ணக் கூடாது. முன்னாலேயே தகவல் சொல்லிட்டோம். விட்டுருங்க.'

நேராகப் போய்க் கேட்கலாமா என்று கூட யோசித்தார்கள். கடைசியில் அவர்களை மனதார சபித்ததோடு சரி. அன்று சட்டென ஒரு வேடிக்கைப் பொருளாக் கியவர்கள் வீட்டிற்கா குடி வந்திருப்பது!

# நேசம்

"**ஏ**ன் டல்லா இருக்கே?"

கணேசனின் கேள்விக்கு மழுப்பினாள்.

"வீடு பிடிச்சிருக்கில்லே..."

"ம்."

"அப்பா ஞாபகமா?"

"ம்..."

"இந்த ஸண்டே போய்ப் பார்த்து விட்டு வரலாமா?"

எப்படியாவது அவள் முகத்தில் மலர்ச்சியைக் கொண்டு வரத் துடிப்பது புரிய, சிரித்தாள்.

"வேணாம். இப்பதானே வந்துட்டு போனாரு..."

**ம**றுநாள் இன்னொரு அதிர்ச்சியும் - அதை அதிர்ச்சி என்பதை விட, மகிழ்ச்சி என்றே சொல்ல வேண்டும்.

மாடி போர்ஷனுக்கே கேட்கிற அளவு இரைச்சல். சித்ராவின் குரல்தான்.

"இந்த வீட்டுல ஒண்ணு உங்கம்மா இருக்கணும்... இல்லே நான் இருக்கணும். முடிவு பண்ணுங்க..."

வேறு குரல்கள் கேட்க வில்லை.



# மறப்பதில்லை நெஞ்சம்.

ரிஷபன்

காய்கறி வண்டியைக் கூப்பிடுகிற சாக்கில் பூமா கீழே வந்தாள்.

பாகிரதியின் இருண்ட, கண்ணீர் ததும்பிய முகம் பார்த்து உள் மனசு குதூகலித்தது. 'வேணும். நல்லா வேணும்!'

காய்கறி வண்டியைச் சுற்றி எதிர், பக்கத்து வீட்டுப் பெண்கள்.

''புதுசா குடி வந்தீங்களா?''

பூமா தலையசைத்தாள்.

வம்பு!

"இந்த வீட்டுக்கா?"

"ஏன்... போர்ஷன் நல்லாத்தானே இருக்கு." - பூமாவின் குரலில் பொய்யான ஆச்சர்யம்.

"வீட்டுக்காரிதான் ராட்சசி! மாமியாரை இவ படுத்தறதைப் பார்த்தா... ரத்தக் கண்ணீர்தான். தலைகீழ் நிலைமை இங்கே..."

"அவங்க புருஷன் எதுவும் சொல்ல மாட்டாரா?" பூமா இயல்பாய் வம்பு வளர்த்தாள்.

"அரைக் கிலோ போடுப்பா. அவன் ஏன் வாயைத் திறக்கறான்! மனைவி சொல்லே மந்திரம்!"

பெண்கள் சிரித்தார்கள். பூமா படியேறிய போது பாகிரதி வாசல் வராந்தாவில் ஒடுங்கியிருந்தாள்.

மறுபடியும் பூமாவிடம் இறுக்கம்.

'வேணும்... நல்லா வேணும்.'

அதன்பின் நிறைய கூச்சல்கள். நிறைய அழுகை. எப்படியும் இரண்டு நாட்களுக்கு ஒருமுறை.

பூமா மனசு இறுக்கம் தளர ஆரம்பித்தது.

அப்பா, அம்மா வளர்ப்பு இப்படியில்லை. நேசம் மட்டுமே சொல்லிச் சொல்லி வளர்க்கப்பட்டவள். சுலபமாய் மறந்து விடுகிற மனசு அப்பா, அம்மாவுக்கு.

பூமாவின் உள்ளும் இரக்கம் ஊற்றெடுக்க ஆரம்பித்தது.

"எ...ன்ன?"

சுருண்டு படுத்திருந்தவளின் கண்கள் இடுங்கியிருந்தன. பூமாவைப் பார்த்ததும் மிரண்டு போயிருந்தாள்.

"என்ன மாமி... உடம்பு சரியில்லையா?"

பாகிரதியிடமிருந்து பதில் இல்லை. தொட்டதில் உடம்பு சுட்டது.

"டாக்டர்கிட்டே போகலியா?"

பதறிக் கேட்டதில் இன்னும் மிரண்டாள்.

"வாங்கோ... போயிட்டு வந்திரலாம்..."

"இ...ல்லே... வே...ணாம்."

வற்புறுத்தி இழுத்துப் போனாள். ஊசி போட்டு, மருந்து வாங்கியதில் சற்று நிம்மதி வந்தது. ரிக்ஷாவில் வீடு திரும்பினார்கள்.

"நீங்க படுத்துக்கங்க. என்ன சமைக்கணும். சொல்லுங்க."

"நீ... எதுக்கு?"

"ஸ்ஸ். பேசாம படுங்க."

பரபரவென்று சுழன்றாள். மிளகு ரசத்தில் சாதம் கரைத்துக் கொடுத்து, வெந்நீர் குடிக்கக் கொடுத்ததும் பாகிரதிக்கு அழுகை பீறிட்டது. தன்னிரக்க நிலை.

"வேணாம். நீங்க அலட்டிக்காதீங்க. படுங்க."

**சி**ன்னச் சின்னதாய் வெளியே தெரியாத உதவிகள். பாகீரதிக்கு உறுத்தல் குறைந்து பழக்கம் இயல்பானது. சித்ரா எப்போது வேலைக்குப் போவாள், பூமா கீழ் றங்கி வருவாள் என்று ஏங்கும் அளவு நெருக்கமானது.

பூமாவால் மனத்தோடு வைத்துக் கொள்ள முடியவில்லை. கணவனிடம் சொல்லி விட்டாள்.

"பாவமா இருக்குங்க. அப்படிப் படுத்தறா! இவ பொம்பளையான்னே சந்தேகமா இருக்கு."

"சரி. சரி. நீ ஏதாவது வம்புல மாட்டிக்கப் போறே."

"சேச்சே. அவ இல்லாதப்பதான் எங்க ராஜ்யம்."

"நினைச்சுக்கிட்டு இரு. வம்பு எந்த உருவத்துல வேணா வரும். யார் கண்டது..? இப்பவே அவளுக்குத் தெரிஞ்சிருக்குமோ... என்னவோ! காலி பண்ணச் சொல்லிடப் போறா..."

"இதுல என்னங்க தப்பு இருக்கு. எனக்கும் போரடிக்குது. சும்மாத்தானே இருக்கேன். கூடமாட ஒத்தாசை செய்யறதுல பொழுது போவுது."

"ஒக்கே... இட்ஸ் யுவர் ஹெட்ஏக்..."

**ஊ**ரிலிருந்து அப்பா, அம்மா இருவருமே வந்திருந்தார்கள். குடித்தனம் நடத்துகிற அழகைப் பார்க்க வேண்டுமாம்.

அவர்களுடன் பேச்சு கொடுத்தபடி இருந்தவளுக்குப் பத்து மணிக்கு பதற்றம் வந்து விட்டது. கீழே போய்ப் பார்க்க வேண்டும். மாமி என்ன செய்கிறாரோ!

"என்னடி... எங்கே போறே?"

"கீழ் வீட்டுக்குத்தான்."

தகவல் சொன்னாள் - எல்லாவற்றையும். அப்பா சட்டென்று சீறினார்.

"நீ ஏன் அவங்களுக்கு ஹெல்ப் பண்றே?"

"பாவம்ப்பா!"

"நல்லா அனுபவிக்கட்டும்."

அம்மா நிதானமாய் இருந்தாள்.

"தொலையறது விடுங்க. நமக்கு என்ன.. அதைவிட நல்ல வரன் அமைஞ்சாச்சு."

பாகீரதிக்குக் கேட்டிருக்க வேண்டும்.

"நீ எதுக்கு சிரமப்படறே. உங்கப்பா, அம்மா வந்திருக்காங்களே..." என்றாள் சங்கடமாய்.

பூமா சிரித்தாள்.

"உறவை விட சிநேகம் ரொம்ப தித்திப்பா இருக்கே மாமி..." என்றாள் - பதிலில் மனசு உண்மையாகவே இழைய.

# "அவனுக்கு கிரிமினல் மூளைப்பா!"

**அ**தென்ன கிரிமினல் மூளை என்று தனியாக இருக்கிறதா?

"இல்லை!" என்கிறார் சென்னை பொது மருத்துவமனை நரம்பியல் நிபுணர் டாக்டர் எஸ். தர்மராஜன்.

"அப்படியானால் பிறவி [illegible]



கிரிமினல் மூளை ஒருவருக்கு இருக்க வேண்டும்? அப்படி எல்லாம் பிறவியிலேயே அது அமைவதில்லை. சூழ்நிலையும், பயிற்சியுமே கிரிமினல் மூளை, கலை வெளிப்பாட்டு மூளை போன்றவற்றை உருவாக்குகின்றன.

"மூளையின் எடையில் பெரும் பகுதி பெருமூளையைச் சேர்ந்தது. இதன் வெளிப்பாகம் நரம்பு செல்களால் அமைந்தது. இந்தப் புற அமைப்பின் அடியில் அநேகமாகப் பெருமூளை முழுவதும் நரம்பு நார் செல்கள் உள்ளன. சில நார்கள் புறப்பகுதியின் பல்வேறு பகுதிகளை இணைக்கின்றன. பிற நார்கள், புறப்பகுதியைச் சிறு மூளையோடும், மூளைத் தண்டோடும், தண்டுவடத்தோடும் இணைக்கின்றன.

"புறப்பகுதியின் சில பகுதிகளை உணர்ச்சிப் புறப்பகுதி என்பார்கள். புறப்பகுதியின் மிகப் பெரும் பகுதி சேர்க்கைப் புறப்பகுதி, அதாவது அசோசியேஷன் கார்ட்டெக்ஸ். இதுதான் செய்திகளைப் பகுத்து ஆய்ந்து, வகைப்படுத்திச் சேர்த்தமைக்கிறது. அதன் மூலம் சிந்தித்தல், பேசுதல், நினைவு கூர்தல் முதலிய உயர்தர மனத்திறன் எல்லாம் சாத்தியமாகிறது.

"மற்றபடி, எல்லாருக்குமே ஒரே மாதிரியாகத்தான் மூளைப்பகுதி அமைந்திருக்கும். சிலருக்கு விசேஷமாகவும் சிலருக்கு வித்தியாசமாகவும் இருக்காது. சூழ்நிலைகளும், பயிற்சிகளுமே மனிதர்களை நல்லவர்களாகவும் கிரிமினல்களாகவும் வேறு படுத்துகின்றன."

—எஸ்.வி.என்.

## 36. பலிபீடம்

**கா**ட்டாற்றங்கரையோடு மேற்கு நோக்கி இரண்டு நாழிகை வழி தூரம் போனதும் குள்ளன் தென்புறமாகத் திரும்பி அடர்ந்த காட்டுக்குள் புகுந்து சென்றான். காட்டைத் தாண்டியதும் அப்பால் ஒரு பெரிய மேடு இருந்தது. அந்த மேட்டின் மேல் குள்ளன் வெகு லாகவமாக ஏறினான். குதிரைகள் ஏறுவதற்குக் கொஞ்சம் சிரமப்பட்டன. மேட்டின் மேல் ஏறியதும், அது ஒரு ஏரிக்கரை என்று தெரிந்தது. "அதோ!" என்று குள்ளன் சுட்டிக்காட்டிய இடத்தை விக்கிரமனும் பொன்னனும் நோக்கினார்கள். மொட்டை மொட்டையான மலைக்குன்றுகளும், அவற்றின் அடிவாரத்தில் அடர்த்தியாக வளர்ந்திருந்த விருந்து தெரியவந்தது.

இன்னொரு கால் நாழிகைக்கெல்லாம் அவர்கள் குன்றின் அடிவாரத்துக் காட்டுக்கு வந்து சேர்ந்தார்கள். அங்கே குதிரைகள் நடுக்கம் அதிகமானபடியால் விக்கிரமனும் பொன்னனும் குதிரைகள் மீதிருந்து இறங்கி அவற்றை மரத்தில் கட்டினார்கள். பிறகு காட்டுக்குள் பிரவேசித்தார்கள்.

தீவர்த்திகளின் வெளிச்சத்தில் ஆங்காங்கே ஜனங்கள் ஆவேசம் வந்தது போல் ஆடுவதையும் சிலர் மஞ்சள் வஸ்திரம் தரித்துக் கண் மூடித் தியானத்தில் இருப்பதையும், சிலர் அடுப்பு மூட்டிப் பொங்கல் வைப்பதையும், இன்னும் சிலர் கத்திகளைப் பாறைகளில் தீட்டிக் கொண்டிருப்பதையும், சிலர் உடுக்கு அடிப்பதையும் பார்த்துக் கொண்டு போனார்கள். திடீரென்று மரங்கள் இல்லாத




குட்டையான மரங்களும், நூற்றுக்கணக்கான தீவர்த்திகளின் வெளிச்சத்தில், அரைகுறையாகத் தெரிந்தன. அந்த மலையடிவாரக் காட்டில் நடமாடிக் கொண்டிருந்த உருவங்கள் மனிதர்களாய்த்தானிருக்க வேண்டுமென்றாலும் தூரத்திலிருந்து பார்க்கும் போது பேய் பிசாசுகள் தான் நடமாடுகின்றனவோ என்று எண்ணும்படியிருந்தது. பயங்கரத்தை அதிகமாக்குவதற்கு அந்த இடத்திலிருந்து தாரை தப்பட்டைகளின் முழக்கம், உடுக்கு அடிக்கும் சப்தம் - இவையெல்லாம் கலந்து வந்து கொண்டிருந்தன.

விக்கிரமன், பொன்னன் இருவருக்குமே உள்ளுக்குள் திகிலாய்த்தானிருந்தது. ஆனாலும் அவர்கள் திகிலை வெளிக்குக் காட்டாமல் குள்ளனைப் பின்பற்றி ஏரிக்கரையோடு சென்றார்கள். குள்ளனுடைய நடைவேகம் இப்போது இன்னும் அதிகமாயிற்று. அவன் ஏரிக் கரையோடு சற்றுத் தூரம் போய் ஜலம் வறண்டிருந்த இடத்தில் இறங்கி, குறுக்கே ஏரியைக் கடந்து செல்லலானான். அவனைப் பின்தொடர்ந்து விக்கிரமனும் பொன்னனும் குதிரைகளைச் செலுத்தினார்கள். குதிரைகளும் பீதி அடைந்திருந்தன என்பது அவற்றின் உடல் நடுக்கத்திலிருந்து

வெட்டவெளி தென்பட்டது. அந்த வெட்டவெளியின் வலதுபுறத்தில் ஒரு மொட்டைக் குன்று நின்றது. அதில் பயங்கரமான பெரிய காளியின் உருவம் செதுக்கப்பட்டு, அதன் மேல் பளபளப்பான வர்ணங்கள் பூசப்பட்டிருந்தன. காளியின் கண்கள் உருட்டி விழித்துப் பார்ப்பது போலவே தோற்றமளித்தன. அந்த உருவத்துக்குப் பக்கத்தில் சிலர் கும்பலாக நின்றார்கள். அவர்களுக்கு நடு மத்தியில் எல்லாரையும் விட உயர்ந்த ஆகிருதியுடனும், தலையில் செம்பட்டை மயிருடனும், கழுத்தில் கபால மாலையுடனும், நெற்றியில் செஞ்சந்தனமும் குங்குமமும் அப்பிக் கொண்டு, கபால பைரவர் நின்றார். அவருக்குப் பின்னால் ஒருவன் நின்று உடுக்கை அடித்துக் கொண்டிருந்தான். கபால பைரவருடைய கண்கள் அப்போது மூடியிருந்தன. அவருடைய வாய் ஏதோ முணுமுணுத்துக் கொண்டிருந்தது. அவருடம்பு லேசாக முன்னும் பின்னும் ஆடிக் கொண்டிருந்தது.

மகா கபால பைரவர் நின்ற குன்றின் அடிவாரத்துக்கு எதிரே கொஞ்ச தூரத்தில் ஒரு

சிறு பாறை இருந்தது. இயற்கையாகவே அது பலி பீடம் போல் அமைந்திருந்தது. அந்தப் பலி பீடத்தின் மேல் சிவனடியார் கையும் காலும் உடம்பும் கயிறுகளால் கட்டப் பட்டுக் கிடந்தார். அவருடைய கண்கள் நன்றாகத் திறந்திருந்தன. அங்குமிங்கும் அவருடைய கூரிய கண்கள் சுழன்று சுழன்று பார்த்துக் கொண்டிருந்தன.

பலி பீடத்துக்குப் பக்கத்தில் ஒரு ராட்சத உருவம் கையிலே பிரம்மாண்டமான கத்தியுடன் ஆயத்தமாய் நின்றது. மகா கபால பைரவர் கண்ணைத் திறந்து பார்த்து ஆக்ஞை இட வேண்டியதுதான். உடனே சிவனடியாரின் கழுத்தில் கத்தி விழுந்து விடச் சித்தமாயிருந்தது!

மேலே விவரித்த காட்சியையெல்லாம் விக்கிரமன் ஒரு நொடிப் பொழுதில் பார்த்துக் கொண்டான். பின்னர், ஒரு கணங்கூட அவன் தாமதிக்கவில்லை. கையில் கத்தியை எடுத்து வீசிக் கொண்டு ஒரே பாய்ச்சலில் பலி பீடத்துக்கருகில் சென்றான். அந்த ராட்சத உருவத்தின் கையிலிருந்த கத்தியைத் தன் கத்தியினால் ஓங்கி அடிக்கவும், அது தூரத்தில் போய் விழுந்தது. உடனே, சிவனடியாரின் பக்கத்திலே வந்து நின்று கொண்டான். தன்னைப் பின்தொடர்ந்து வந்திருந்த பொன்னனைப் பார்த்து, "பொன்னா! ஏன் நிற்கிறாய்? கட்டுகளை உடனே அவிழ்த்து விடு!" என்றான்.

இவ்வளவும் கண்மூடிக் கண் திறக்கும் நேரத்தில் நடந்து விட்டது. சுற்றிலும் நின்றவர்கள் எல்லோரும், "ஹா! ஹா!" என்று கூச்சலிட்டதைக் கேட்டு கபால பைரவர் கண்விழித்துப் பார்த்தார். நிலைமை இன்னதென்று தெரிந்து கொண்டார். நிதானமாக நடந்து பலிபீடத்துக்கு அருகில் வந்து விக்கிரமனை உற்றுப் பார்த்தார்.

"ஹா ஹா ஹா!" என்று அவர் நகைத்த ஒலி குன்றுகளும் பாறைகளும் அடர்ந்த அந்த வனாந்திரப் பிரதேசமெல்லாம் பரவி எதிரொலி செய்தது.

அதைக் கேட்டவர்களுக்கெல்லாம் மயிர்க்கூச்சு உண்டாயிற்று.

இதற்குள் என்னவோ விசேஷம் நடக்கிறது என்று அறிந்து நாலா பக்கத்திலிருந்தும் ஜனங்கள் ஓடி வந்து பலிபீடத்தைச் சூழ ஆரம்பித்தார்கள். அதைக் கண்ட மகா கபால பைரவர் தமது ஒற்றைக் கையைத் தூக்கி, "ஹூம்!" என்று கர்ஜனை செய்தார். அவ்வளவுதான் எல்லோரும் சட்டென்று விலகிச் சென்று சற்று தூரத்திலேயே நின்றார்கள். கீழே விழுந்த கத்தியை எடுத்துக் கொண்டு வந்த ராட்சதனும் அந்த ஹுங்காரத்துக்குக் கட்டுப்பட்டுத் தூரத்தில் நின்றான். பொன்னனும் நின்ற இடத்திலேயே செயலிழந்து நின்றான்.

மகா கபால பைரவர் விக்கிரமனை உற்றுப் பார்த்தவண்ணம் கூறினார் :- "பிள்ளாய்! நீ பார்த்திபசோழனின் மகன் விக்கிரமன் அல்லவா? தக்க சமயத்தில் நீ வந்து சேர்வாய் என்று காளிமாதா அருளியது உண்மையாயிற்று. மாதாவின் மகிமையே மகிமை!"

காந்த சக்தி பொருந்திய அவருடைய சிவந்த கண்களின் பார்வையிலிருந்து விலகிக் கொள்ள முடியாதவனாய் விக்கிரமன் பிரமித்து நின்றான்.

"பிள்ளாய்! உன்னைத் தேடிக் கொண்டு நான் மாமல்லபுரத்துக்கு வந்தேன். அதற்குள் அந்தப் பித்தன் மாரப்பன் தலையிட்டுக் காரியத்தைக் கெடுத்து விட்டான். ஆனாலும் இன்றிரவு நீ இங்கு எப்படியும் வருவாய் என்று எதிர்பார்த்தேன்!"

மந்திரத்தினால் கட்டுண்ட நாக சர்ப்பத்தின் நிலைமையிலிருந்து விக்கிரமன், விம்முகின்ற குரலில், "நீர் யார்? எதற்காக என்னை எதிர்பார்த்தீர்?" என்றான்.

"எதற்காகவா? இன்றிரவு இந்தத் தக்ஷிண பாரத தேசத்தில் காளிமாதாவின் சாம்ராஜ்யம் ஸ்தாபிதமாகப் போகிறது. இந்த சாம்ராஜ்யத்திற்கு உனக்கு இளவரசுப் பட்டம் கட்ட வேண்டுமென்று மாதாவின் கட்டளை!" என்றார் கபால பைரவர்.

அப்போது எங்கிருந்தோ 'கலுக்' என்று பரிகாசச் சிரிப்பின் ஒலி எழுந்தது. கபால பைரவரும் விக்கிரமனும் உள்பட அங்கிருந்தவர்கள் அனைவரும் அக்கம்பக்கம் திரும்பிப் பார்த்தார்கள். ஆனால் சிரித்தது யார் என்பதைக் கண்டுபிடிக்க யாதொரு வழியும் தென்படவில்லை.

விக்கிரமனை அந்தனை நேரமும் கட்டியிருந்த மந்திர பாசமானது மேற்படி சிரிப்பின் ஒலியினால் அறுபட்டது. அவன் சிவனடியாரை ஒருமுறை பார்த்துவிட்டுத் திரும்பிக் கபால பைரவரை நேருக்கு நேர் நோக்கினான்.

"நீர் சொல்வது ஒன்றும் எனக்கு விளங்கவில்லை. எனக்கு இளவரசுப் பட்டம் கட்டப் போவதாகச் சொல்கிறீர். அது உண்மையானால், முதலில் நான் செய்யப் போகும் காரியத்துக்குக் குறுக்கே நிற்க வேண்டாம். இதோ இந்தப் பலிபீடத்தில் கட்டுண்டு கிடக்கும் பெரியார் எங்கள் குலத்தின் நண்பர். எனக்கும் என் அன்னைக்கும் எவ்வளவோ பரோபகாரம் செய்திருக்கிறார். அவரை விடுதலை செய்வது என் கடமை.

என் கையில் கத்தியும் என் உடம்பில் உயிரும் இருக்கும் வரையில் அவரைப் பலியிடுவதற்கு நான் விட மாட்டேன்!" என்று சொல்லி விக்கிரமன் பலிபீடத்தை அணுகி, சிவனடியாரின் கட்டுக்களை வெட்டிவிட யத்தனித்தான்.

"...நில்...!" என்று பெரிய கர்ஜனை செய்தார் கபால பைரவர். அஞ்சா நெஞ்சங் கொண்ட விக்கிரமனைக் கூட அந்தக் கர்ஜனை சிறிது கலங்கச் செய்து விட்டது. அவன் துணுக்குற்று ஒரு கணம் ஸ்தம்பித்து நின்றான். சிவனடியாரின் கட்டுக்களை வெட்டுவதற்காக அவன் நீட்டிய கத்தி நீட்டியபடியே இருந்தது.

கபால பைரவர் மறுபடியும் உரத்த குரலில், "பிள்ளாய் விக்கிரமா! இந்தப் போலிச் சிவனடியார் - இந்த வஞ்சக வேஷதாரி - இந்தப் பொய் ஜடாமகுடதாரி யார் என்று அறிந்தால், இவ்விதம் சொல்ல மாட்டாய்! இவரைக் காப்பாற்றுவதற்கு இவ்வளவு முனைந்து நிற்க மாட்டாய்!" என்றார்.

அவருடைய குரலில் தொனித்த ஆத்திரமும் அழுத்தமும் விக்கிரமனைத் திகைப்படையச் செய்தன. சிவனடியார் பல்லவ ராஜ்யத்தின் ஒற்றர் தலைவன் என்று தான் முன்னமே சந்தேகித்ததும் அவனுக்கு நினைவு வந்தது.

கபால பைரவர் மீண்டும், "இந்த வேஷதாரியையே கேள், 'நீ யார்?' என்று; தைரியமிருந்தால் சொல்லட்டும்!" என்று அடித்தொண்டையினால் கர்ஜனை செய்தார்.

விக்கிரமன் சிவனடியாரைப் பார்த்தான். அவருடைய முகத்தில் புன்னகை தவழ்வதைக் கண்டான். அதே சமயத்தில், "விக்கிரமா! கபால மாலையணிந்த இந்த வஞ்சக வேஷதாரி யார் என்று முதலில் கேள்; தைரியமிருந்தால் சொல்லட்டும்!" என்று இடிமுழக்கம் போன்ற ஒரு குரல் கேட்டது. இவ்வாறு கேட்டுக் கொண்டு, பக்கத்திலிருந்த பாறையின் மறைவிலிருந்து ஓர் உருவம் வெளிப்பட்டது. அங்கிருந்தவர்கள் அத்தனை பேருடைய கண்களும் அந்த உருவத்தின் மேல் விழுந்தன. தீவர்த்தி வெளிச்சம் அந்த முகத்தில் விழுந்த போது, "ஆ!" என்ற வியப்பொலி ஏககாலத்தில் அநேகருடைய வாயிலிருந்து எழுந்தது.

விபூதி ருத்திராட்சமணிந்து, முகத்தில் ஞான ஒளி வீசத் தோன்றிய அப்பெரியாரைப் பார்த்ததும் விக்கிரமனுக்கு என்றுமில்லாத பயபக்தி உண்டாயிற்று.

வந்தவர் வேறு யாருமில்லை. பல்லவ சாம்ராஜ்யத்தின் பழைய சேனாதிபதியும், வாதாபி



கொண்ட மகாவீரருமான சிறுத்தொண்டர் தான்.

## 37. நீலகேசி

பாறை மறைவிலிருந்து சிறுத்தொண்டர் வெளிப்பட்ட சில வினாடிகளுக்கெல்லாம் இன்னும் சில அதிசயங்கள் அங்கே நிகழ்ந்தன. பாறைகளின் பின்னாலிருந்தும் மரங்களின் மறைவிலிருந்தும், இன்னும் எங்கிருந்துதான் வந்தார்கள் என்று சொல்ல முடியாதபடியும், இந்திரஜாலத்தினால் நிகழ்வது போல், திடீர் திடீரென்று ஆயுதபாணிகளான போர் வீரர்கள் அங்கே தோன்றிக் கொண்டிருந்தார்கள். இதைவிடப் பெரிய மகேந்திர ஜாலவித்தை ஒன்றும் அங்கே நடந்தது. பலிபீடத்தில் கட்டுண்டு கிடந்த சிவனடியார் எப்படியோ திடீரென்று அக் கட்டுக்களிலிருந்து விடுபட்டு எழுந்து பலி பீடத்திலிருந்து கீழே குதித்தார்.

இதற்கிடையில், சிறுத்தொண்டர் நேரே மகா கபால பைரவர் நின்ற இடத்தை நோக்கி வந்து கொண்டிருந்தார். அவரைப் பார்த்ததும், கபால பைரவரின் முகத்தில் தோன்றிய பீதி நம்ப முடியாததாயிருந்தது. சிறுத்தொண்டர் அருகில் நெருங்க நெருங்க, அவருடைய பீதி அதிகமாயிற்று. அவருடைய உடம்பெல்லாம் நடுங்கிற்று. இன்னும் சிறுத்தொண்டர் அவருடைய சமீபத்தில் வந்து நேருக்கு நேராக முகத்தை ஏறிட்டுப் பார்த்து, "ஓ கபாலிக வேஷதாரியே! மகா காளியின் சந்நிதியில் நீ யார் என்று உண்மையைச் சொல்!" என்று கேட்ட போது கபால பைரவர் இரண்டடி பின் வாங்கி, பிறகு நடக்கவும் நிற்கவும் சக்தியற்றவராய்த் தள்ளாடித் தொப்பென்று கீழே விழுந்தார்.

அப்போது அங்கே சூழ்ந்திருந்த காளி உபாசகர்களிடையில் 'ஹாஹாகாரம்' உண்டாயிற்று. வெறியில் மூழ்கிக் கிடந்த அந்தக் கபாலிகர்களால் என்ன விபரீதம் நேரிடுமோ என்று விக்கிரமன் கூடச் சிறிது துணுக்கமடைந்தான்.

பொன்னனோ, வியப்பு, பயபக்தி முதலிய பலவித உணர்ச்சிகள் பொங்க, தன்னை மறந்து செயலற்று நின்றான்.

கபால பைரவர் கீழே விழுந்து நாலா புறமிருந்தும் கபாலிகர்கள் ஓடிவரத் தொடங்கிய சமயத்தில், சிறுத்தொண்டர் சட்டென்று பலிபீடத்தின் மீது ஏறிக் கொண்டார்.

"மகா ஜனங்களே! காளி மாதாவின் பக்தர்களே! நெருங்கி வாருங்கள். 'மகா கபால பைரவர்' என்ற பொய்ப் பெயருடன் உங்களையெல்லாம் இத்தனை காலமும் ஏமாற்றி வஞ்சித்து வந்த ஒற்றைக் கை மனிதனைப் பற்றிய உண்மையைச் சொல்லுகிறேன்" என்றார்.

சிறுத்தொண்டரைப் பார்த்தவுடனே கபால பைரவர் பீதியடைந்து கீழே விழுந்ததினால் ஏற்கெனவே அக் கபாலிகர்களின் மனத்தில் குழப்பம் உண்டாயிருந்தது. எனவே, சிறுத்தொண்டர் மேற்கண்டவாறு சொன்னதும், அவர்கள் பலிபீடத்தைச் சூழ்ந்து கொண்டு, அவரையே பார்த்த வண்ணமாய் நின்றார்கள்.

சிறுத்தொண்டர் கம்பீரமான குரலில், காடு மலையெல்லாம் எதிரொலி செய்யுமாறு பேசினார்.

'கேளுங்கள்! நாம் பிறந்த இந்தத் தமிழகமானது மகா புண்ணியம் செய்த நாடு. எத்தனையோ மகா புருஷர்கள் இந்நாட்டிலே தோன்றி மெய்க் கடவுளின் இயல்பையும், அவரை அடையும் மார்க்கத்தையும் நமக்கு உபதேசித்திருக்கிறார்கள். திருமூல மகரிஷி,

***அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்***

என்று அருளியிருக்கிறார், வைஷ்ணவப் பெரியார்.

***அன்பே தகளியாய் ஆர்வமே நெய்யாக***

*"இன்புருகு சிந்தை இடுதிரியா -*
*நன்புருகி*
*ஞானச் சுடர் விளக்கேற்றினேன்"*

என்று திருவாய் மலர்ந்திருக்கிறார். இத்தகைய மகோந்நதமான தர்மங்களுக்கு உறைவிடமாயுள்ள நமது நாட்டில், கபாலிகம், பைரவம் என்னும் அநாசாரக் கோட்பாடுகளையும், நரபலி, மாமிசப் பட்சணம் முதலிய பயங்கர வழக்கங்களையும் சிலர் சிறிது காலமாகப் பரப்பி வருகிறார்கள். அன்பே உருவமான சிவபெருமானும் கருணையே வடிவமான பராசக்தியும் நரபலியை விரும்புகிறார்கள் என்று நம்புவது எவ்வளவு பெரிய அறியாமை? சிவபெருமான் கையில் மண்டை ஓட்டை வைத்திருப்பதாகவும், பராசக்தி கபால மாலையைத் தரிப்பதாகவும் புராணங்களில் சொல்லியிருப்பதெல்லாம் தத்துவார்த்தங் கொண்டவை என்பதை நமது பெரியோர்கள் நமக்கு உணர்த்தியிருக்கிறார்கள். அவ்விதமிருக்க இப்புண்ணிய நாட்டில் நரபலியென்னும் கொடிய வழக்கம் பரவுவதற்குக் காரணம் என்ன? இந்தத் தீய பிரசாரத்தின் மூலவேர் எங்கே இருக்கிறது? - இதைக் கண்டுபிடிப்பதற்காக நானும் சற்று முன் இந்தப் பலிபீடத்தில் கட்டுண்டு கிடந்த என் தோழர் சிவனடியாரும் பெருமுயற்சி செய்து வந்தோம். கடைசியாக, அந்த முயற்சியில் என் தோழர் வெற்றி பெற்றார்; உண்மையைக் கண்டுபிடித்தார்...."

அப்போது ஒரு குரல், "அவர் யார்?" என்று கேட்டது.

"அவர் எங்கே?" என்று பல குரல்கள் கூவின.

உண்மை என்னவெனில், சிறுத்தொண்டர் திடீரென்று தோன்றியவுடன் ஏற்பட்ட குழப்பத்தில் சிவனடியார் ஒருவரும் கவனியாதபடி அந்த இடத்தை விட்டு அகன்று விட்டார்.

சிறுத்தொண்டர் மேலும் சொல்வார்:-

"இன்னும் இரண்டு நாளில் உறையூரில் நடக்கப் போகும் வைபவத்துக்கு நீங்கள் வந்தால், அந்த மகான் யார் என்பதை அறிவீர்கள். தற்போது இதோ இங்கே கீழே விழுந்து பயப்பிராந்தியினால் நடுங்கிக் கொண்டிருக்கும் கபால பைரவன் யார் என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள். புகழ்பெற்ற நமது மகேந்திர சக்கரவர்த்தியின் காலத்தில் - இருபது வருஷத்துக்கு முன்னால் - வாதாபி அரசன் புலிகேசி நமது தமிழகத்தின் மேல் படையெடுத்து வந்தது உங்களுக்கு ஞாபகம் இருக்கிறதா..." என்று சிறுத்தொண்டர் கேட்டு நிறுத்திய போது பல குரல்கள், "ஞாபகம் இருக்கிறது!" என்று கூவின.

"அந்த ராட்சதப் புலிகேசியும் அவனுடைய படைகளும் நம்பிக்கைத் துரோகம் செய்து, இச்செந்தமிழ் நாட்டின் பட்டணங்களிலும் கிராமங்களிலும் செய்து விட்டுப் போன அட்டூழியங்களையெல்லாம் நீங்கள் மறந்திருக்க முடியாது. மகேந்திர சக்கரவர்த்தி காலமான பிற்பாடு தரும ராஜாதி ராஜ நரசிம்ம பல்லவரும், நானும்பெரும் படை கொண்டு புலிகேசியைப் பழிவாங்குவதற்காக வாதாபிக்குப் படையெடுத்துச் சென்றதையும் நீங்கள் அறிவீர்கள். வாதாபி நகரத்தின் முன்னால் நடந்த கொடிய யுத்தத்தில், நமது வீரத் தமிழ்ப்படைகள் புலிகேசியின் படைகளையெல்லாம் ஹதாஹதம் செய்தன. யுத்த களத்துக்கு வந்த புலிகேசியின் படைகளிலே ஒருவராவது திரும்பிப் போகவிடக் கூடாது என்று சக்கரவர்த்தி கட்டளையிட்டிருந்தார். ஆனால், அவருடைய கட்டளைக்கு மாறாக ஒரே ஒருவனை மட்டும் திரும்பிப் போகும்படி நான் அனுமதித்தேன். போரில் கையை இழந்து, "சரணாகதி" என்று காலில் விழுந்தவனைக் கொல்வதற்கு மனமில்லாமல் அவனை ஓடிப் போக அனுமதித்தேன். அந்த ஒற்றைக் கை மனிதன்தான் இதோ விழுந்து கிடக்கும் நீலகேசி, புலிகேசியை விடக் கொடிய அவனுடைய சகோதரன் இவன்!"

இதைக் கேட்டதும் அந்தக் கூட்டத்தில், "ஆகா!" "அப்படியா?" "என்ன மோசம்!" "என்ன வஞ்சகம்!" என்ற பலவிதமான பேச்சுக்கள் கலகலவென்று எழுந்தன. சிறிது பேச்சு அடங்கிய பிறகு சிறுத்தொண்டர்

## அருள்வாக்கு

பிரம்மசரியத்துக்கு அப்புறம் கிருஹஸ்தாச்ரமமும், அதிலே தாம்பத்யம், சந்ததி விருத்தி எல்லாவற்றையும் வைத்து, அப்புறம் ஓரளவு வைராக்கியத்தோடு குடும்பத்தைவிட்டு, ஆனாலும் வைதிக கர்மாவை விடாமல் நடத்துகிற வானப்ரஸ்த ஆச்ரமத்தை விதித்து, கடைசியில் பூவை இயற்கையாக முதிரவிட்டுக் காயாகிக் கனிகிற நிலையில் ஸந்நியாஸத்தை வைத்தார்கள். லோக வாழ்க்கையை எடுத்த எடுப்பிலேயே விட்டுவிட முடியாது. அதனாலே அப்படிச் செய்ய வேண்டாம். ஆனால், அதே சமயத்தில் சாச்வதமான பரலோக வாழ்க்கையையும் மறக்கக் கூடாது. இவன் ஒரேயடியாக ஏறாவிட்டால் பரவாயில்லை; ஆனால் ஒரே உருளலாக உருண்டு கீழேயும் போய்விடக் கூடாது - என்றுதான் தர்மசாஸ்திரங்களை இவனுக்கு வழிகாட்டியாக வைத்து, இவன் எந்த ஸ்டேஜில் எந்த ஆசிரமத்திலிருந்தாலும் எப்போதும் இவனுக்குக் கொஞ்சம் ஆத்ம சிந்தனை, தெய்வபக்தி, நல்லொழுக்கம், பரோபகாரப்

பண்பு எல்லாம் இருக்கும்படி சீர்படுத்திக் கொடுத்தார்கள். ஆரம்பத்திலேயே வாழ்க்கையின் லக்ஷ்யமான பரமதத்வத்துக்கு விதையைப் போட்டு விட வேண்டும்; அப்போது தான், ஒருவன் உடனே அதற்கென்று தன்னை அர்ப்பணம் பண்ணிக் கொள்ளாவிட்டாலும், அவன் லோக வாழ்க்கை நடத்துகிறபோது கூடக் கெட்டுப்போய் விடாமல், இருக்கிற நிலையிலிருந்து இறங்கிவிடாமல், கொஞ்சம் கொஞ்சமாக மேலே போவான் என்றுதான் அவனுக்கு பிரம்மசர்ய ஆசிரமத்திலேயே வேத - உபநிஷத்துக்களை உபதேசித்துவிட்டார்கள். அதை உடனே உபயோகித்துக் கொண்டு (practical - ஆக apply பண்ணிக் கொண்டு) ஆத்ம விசாரம் பண்ணி ஜீவன் முக்தனாகி விட வேண்டும் என்றில்லை. அது பாங்கில் போட்ட டிபாஸிட் மாதிரி. இவன் பக்குவம் அடைகிற வரையில் அதிலிருந்து கொஞ்சம் கொஞ்சம் வட்டி மாதிரி வந்து கொண்டிருந்தால் போதும். அப்புறம் உரிய பருவத்தில் அதைப் பூராவாக (draw பண்ணி) எடுத்துக் கொள்ளலாம். ஆனால் அந்த டிபாஸிட்டை வாழ்க்கை ஆரம்பிக்கிறபோதே போட்டு இந்த வட்டி கிடைக்கிற மாதிரியாகப் பண்ணிவிட வேண்டும். இல்லாவிட்டால் இவன் யௌவனத்தின் வேகத்திலும், நடுத்தர வயசின் உணர்ச்சி விவகாரங்களிலும், ஏற்றத் தாழ்வுகளிலும், விருத்தாப்பியத்தின் அசக்தத்திலும் (பலவீனத்திலும்) வீணாகவே போய்விடுவான்.



— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்)

மீண்டும் கூறுவார் :

"இவனை நான் மன்னித்து உயிரோடு திருப்பி அனுப்பினேன் என்று தெரிவித்த போது சக்கரவர்த்தி, 'நீ பிசகு செய்தாய்; இதனால் ஏதாவது விபரீதம் விளையும்' என்று சொன்னார். அது உண்மையாகி விட்டது. இந்த நீலகேசி, கபாலிக வேஷத்தில் நமது புண்ணியத் தமிழகத்தில் வந்து இருந்து கொண்டு, பஞ்சத்தினால் ஜனங்களுடைய புத்தி கலங்கியிருந்த காலத்தில் கபாலிகத்தையும், நரபலியையும் பரப்பத் தொடங்கினான். எதற்காக? வீரத்தினால் ஜெயிக்க முடியாத காரியத்தைச் சூழ்ச்சியினால் ஜெயிக்கலாம் என்றுதான். கடல்களுக்கப்பாலுள்ள தேசங்களுக்கெல்லாம் புகழ் பரவியிருக்கும் நமது மாமல்ல சக்கரவர்த்திக்கு விரோதமாக உங்களையெல்லாம் ஏவி விட்டுச் சதிசெய்விக்கலாம் என்றுதான். இந்த உத்தேசத்துடனேயே இவன் கொல்லி மலையின் உச்சியிலுள்ள குகைகளில் ஆயிரக்கணக்கான கத்திகளையும் கோடாரிகளையும் சேர்த்து வைத்திருந்தான்..."

"ஆ!" என்று கபால பைரவனின் கோபக் குரல் கேட்டது.

"ஆம்; அந்த ஆயுதங்களையெல்லாம் சக்கரவர்த்தியின் கட்டளையினால் இன்று அப்புறப்படுத்தியாகி விட்டது. இன்னும் இந்தச் சோழநாட்டு இளவரசன் விக்கிரமனையும் தன்னுடைய துர்நோக்கத்திற்கு உபயோகப்படுத்திக் கொள்ள எண்ணியிருந்தான். அதற்காகவே பார்த்திப சோழ மகாராஜாவின் வீரபத்தினி அருள்மொழித் தேவியைச் சிறைப்படுத்தி வைத்திருந்தான்..."

அப்போது மகா கபாலபைரவர் தரையிலிருந்து சட்டென்று எழுந்து நின்று, "எல்லாம் பொய்; கட்டுக்கதை; இதற்கெல்லாம் சாட்சி எங்கே?" என்று கேட்டார். அப்போது ஒருவாறு அவருடைய பீதி தெளிந்ததாகக் காணப்பட்டது.

கபால பைரவர் "சாட்சி எங்கே?" என்று கேட்டதும் "இதோ நான் இருக்கிறேன். சாட்சி!" என்றது ஒரு குரல். திடீரென்று ஒரு வென்வேல மரத்தின் மறைவிலிருந்து மாரப்ப பூபதி தோன்றினான்.

"ஆமாம், நான் சாட்சி சொல்கிறேன். இந்தக் கபால பைரவர் என்னும் நீலகேசி உண்மையில் கபாலிகன் அல்ல. வேஷதாரி. இவன் மகா ராஜாதிராஜ நரசிம்ம பல்லவ சக்கரவர்த்திக்கு எதிராகச் சதிசெய்தான். அந்தச் சதியில் என்னையும் சேரும்படி சொன்னான். நான் மறுத்து விட்டேன். அதன்மேல், இந்தத் தேசப்பிரஷ்ட இளவரசனைத் தன்னுடன் சேர்த்துக் கொள்ள விரும்பினான். சக்கரவர்த்தியின் கட்டளைப்படி காஞ்சிக்கு நான் அனுப்பிய இந்த இளவரசனை இவன் வழியில் மறித்து இங்கே கொண்டுவர ஏற்பாடு செய்தான்."

அப்போது சிறுத்தொண்டர், "போதும்,

மாரப்பா! உன் சாட்சியம் போதும்!" என்றார்.

மாரப்பன் மனத்திற்குள் என்ன உத்தேசித்திருந்தானோ தெரியாது. தன்னைப் புறக்கணித்து விட்டு மகா கபால பைரவர் விக்கிரமனுக்கு யுவராஜா பட்டம் கட்டுவதாகச் சொன்னதைக் கேட்டு அவனுக்கு ஆத்திரம் உண்டாகியிருக்கலாம். அல்லது சக்கரவர்த்திக்கு விரோதமாகச் சதிசெய்த குற்றம் தன் பேரில் ஏற்படாமலிருக்க வேண்டுமென்று எண்ணியிருக்கலாம்.

அவன் உத்தேசம் எதுவாயிருந்தாலும், அப்போது யாரும் எதிர்பாராத ஒரு காரியத்தை அவன் செய்தான். கையில் உருவிய கத்தியுடன் மகா கபால பைரவர் நின்ற இடத்தை அணுகினான். "சக்கரவர்த்திக்கு விரோதமாகச் சதிசெய்த இந்தச் சாம்ராஜ்யத் துரோகி இன்று காளி மாதாவுக்குப் பலியாகட்டும்!" என்று கூறியவண்ணம் யாரும் தடுப்பதற்கு முன்னால் கத்தியை ஓங்கி வீசினான். அவ்வளவுதான்; கபால பைரவரின் தலை வேறாகவும் உடல் வேறாகவும் கீழே விழுந்தன.

எல்லாரும் பிரமித்துத் திகைத்து நிற்கும் போது மாரப்பபூபதி பலி பீடத்தண்டை வந்து சிறுத்தொண்டருக்கு முன்னால் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, "பிரபோ! ஆத்திரத்தினால் செய்து விட்டேன். நான் செய்தது குற்றமானால் மன்னிக்க வேண்டும்" என்றான்.

அச்சமயம் யாரும் எதிர்பாராத இன்னொரு காரியம் நிகழ்ந்தது. கையில் கத்தியுடன் சித்திரகுப்தன் எங்கிருந்தோ வந்து பலி பீடத்தருகில் குதித்தான். படுத்திருந்த மாரப்பனுடைய கழுத்தில் அவன் வீசிய கத்தி விழுந்தது! அக்குள்ளனை உடனே சில பல்லவ வீரர்கள் பிடித்துக் கொண்டார்கள். குள்ளனோ "ஹீஹீஹீ" என்று சிரித்தான்.

சில நிமிஷ நேரத்தில் நடந்துவிட்ட இக்கோர சம்பவங்களைப் பார்த்த விக்கிரமன் மிகவும் அருவருப்பை அடைந்தான். யுத்த களத்தில் நேருக்கு நேர் நின்று போரிட்டு ஒருவரையொருவர் கொல்லுவது அவனுக்குச் சாதாரண சம்பவமானாலும், இம்மாதிரி எதிர்பாராத கொலைகள் அவனுக்கு வேதனையளித்தன. உடனே, அருகில் நின்ற பொன்னனைப் பார்த்து, "பொன்னா! நாம் போகலாம் வா!" என்றான். அப்பொழுது தான் தன்னையும் பொன்னனையும் சூழ்ந்து நின்ற பல்லவ வீரர்களை அவன் கவனிக்க நேர்ந்தது.

அந்த வீரர்களின் தலைவன் தன் கையிலிருந்த ஓலையை விக்கிரமனிடம் காட்டினான். அதில் நரசிம்ம சக்கரவர்த்தியின் முத்திரை பதித்த கட்டளை காணப்பட்டது. உறையூரிலிருந்து காஞ்சிக்கு வந்து கொண்டிருக்கும் சோழ இளவரசன் விக்கிரமனை வழியில் திருப்பி உறையூருக்கே மீண்டும் கொண்டு போகும்படிக்கும், விசாரணை உறையூரிலேயே நடைபெறுமென்றும் அவ்வோலையில் கண்டிருந்தது.

விக்கிரமன் அந்த ஓலையைப் பார்த்து விட்டுச் சுற்றுமுற்றும் பார்த்தான். அவனுடைய கையானது உடைவாளின் மேல் சென்றது. அப்போது பொன்னன், "மகாராஜா! பதறவேண்டாம்!" என்றான்.

இதையெல்லாம் கவனித்த சிறுத்தொண்டர், பல்லவவீரர் தலைவனைப் பார்த்து, "என்ன ஓலை?" என்று கேட்டார். வீரர் தலைவன் அவரிடம் கொண்டு போய் ஓலையைக் கொடுத்தான். சிறுத்தொண்டர் அதைப் படித்துப் பார்த்துவிட்டு, "விக்கிரமா! நீ இந்தக் கட்டளையில் கண்டபடி உறையூருக்குப் போ! நானும் உன் தாயாரை அழைத்துக் கொண்டு உறையூருக்குத்தான் வரப் போகிறேன். இன்று நீ புரிந்த வீரச் செயலைச் சக்கரவர்த்தி அறியும் போது, அவருடைய மனம் மாறாமல் போகாது. அவசரப்பட்டு ஒன்றும் செய்ய வேண்டாம்!" என்றார்.

அடுத்த நிமிஷம் விக்கிரமனும் பொன்னனும் பல்லவ வீரர்கள் புடைசூழ அந்த மயான பூமியிலிருந்து கிளம்பிச் சென்றார்கள்.

அப்புறம் சிறிது நேரம் அங்கே கூடியிருந்தவர்களுக்கு மெய்க்கடவுளின் ஸ்வரூபத்தையும், நரபலியின் கொடுமையையும் பற்றிச் சிறுத்தொண்டர் விரித்துரைத்தார். அதன் பயனாக, அன்று பலியாக இருந்தவர்களும், பலி கொடுக்க வந்தவர்களும் மனம் மாறி, தங்களைத் தடுத்தாட்கொண்ட மகானைப் புகழ்ந்து கொண்டே தத்தம் ஊர்களுக்குச் சென்றார்கள். பலிபீடத்தில் கட்டுண்டு கிடந்த சிவனடியார் யாராயிருக்கலாமென்று அவர்கள் பலவாறு ஊகித்துப் பேசிக் கொண்டே போனார்கள்.

(தொடரும்)

---




"நம்முடைய டாக்டர் முன்னாடி கிரிக்கெட் அம்பயரா இருந்தவர் போல இருக்கு...."

"எப்படிச் சொல்றே?"

"ஆபரேசன் முடிஞ்சு வெளியே வந்ததும் கையை மேலே தூக்கி விரலை உயர்த்தி, 'ஹி இஸ் அவுட்' என்கிறாரே?"

- சீர்காழி வி. கௌரி

# தலைவா, தலைவா!







- சீர்காழி. வி. ரேவதி




- எம். முருகேசன்




- சந்தியூர். ஏ. கோவிந்தன்




- இ. ராஜேந்திரன்




- நாகலை இளவல்

# ஆடி என்றும் ஆன்மீக மாதம்!

**'ஆடிப்பட்டம் தேடி விதை' என்பது பழமொழி. அதே மாதிரி ஆடி மாதம் ஓர் ஆன்மீக மாதமாகவும் திகழ்கிறது என்பதற்கு அதில் வரும் பண்டிகைகளே சாட்சி. அது ஆன்மீக மாதம் என்பதால்தான் கல்யாணம் போன்ற லௌகிக விஷயங்களை நடத்துவதில்லையோ என்கிற அளவுக்கு நிறையப் பண்டிகைகள். என்னென்ன என்பதை விளக்குகிறார், மயிலை கபாலீஸ்வரரர் - கற்பகாம்பாள் திருக்கோயில் தலைமை அர்ச்சகரான விசுவநாத சிவாச்சாரியார்....**

ஆடி முதல் தேதி ஆடிப் பண்டிகை, தட்சிணாயனப் புண்ணிய காலம் ஆரம்பமாவதைக் குறிக்கிறது. சூரியன் தெற்கு நோக்கிப் போகிறதைக் குறிப்பிடும் நாள் இது; தை மாதம் ரதசப்தமி அன்று, சூரியன் வடக்கு நோக்கித் திரும்புகிறான். உத்தராயணம் என்பார்கள் இதை.

ஆடி முதல் நாளன்று, புதிதாகக் கல்யாணம் ஆன மாப்பிள்ளையை மாமனார் வீட்டுக்கு அழைத்து, பால் பாயசம் வழங்குவார்கள். இது சம்பிரதாயமானது மட்டும் அல்ல. நல்ல சகுனமாகவும் கருதப்படுகிறது.

ஆடி மாதம் வரலட்சுமி நோன்பு (இந்த வருடம் ஆகஸ்ட் 4 ஆம் தேதி) கொண்டாடப்படுகிறது. நோன்பின் நோக்கம், பெண் சுமங்கலியாக நூறு வருடம் வாழ, வரலட்சுமி தாயை வேண்டுவதுதான். இதற்குத் தாயார் வீட்டிலிருந்து பெண்ணுக்கு ஒரு கலசம் நிறைய அரிசியைப் போட்டு, மாவிலை வைத்துச் சீதனமாகக் கொடுப்பார்கள்.

ஆடி பதினெட்டாம் பெருக்கு, காவேரியில் 18 படி பொங்கி வந்து ஆசியளிக்கும் நதியை அம்பாளாகவே பாவித்து, பூஜை செய்கிறோம். உப்பு, புளிப்பு, துவர்ப்பு, இனிப்பு என்று வாழ்க்கையின் பல சுவைகளையும் அன்று உணவாக, ஆற்றங்கரையிலேயே உண்ணுகிறோம். குழந்தைகள் புடைசூழ, பெற்றோரும் காவிரித்தாயான அம்பாளும் வாழ்த்த, புதிதாகத் திருமணமான தம்பதி உற்சாகமான, மகிழ்ச்சிகரமான சூழலில், 'நாராயணா, நாராயணா' என்று ஜலத்தை விட்டுக் கொள்ளுகிறோம். தாய் சொரூபமாகவும் நாராயணனை அன்று நினைத்துக் கொள்ளுகிறோம்.

ஆடிப் பூரத்தன்று (ஜூலை 30), பூர நட்சத்திரத்தில், பார்வதி தேவி பரமேசுவரனை அடையத் தவம் இருந்த நாள். (சங்கரன் கோயிலில் இது விழாவாகக் கொண்டாடப்படுகிறது) ஆடிப் பூரத்தன்று கன்னிப் பெண்கள் நல்ல கணவனாக வர வேண்டுமென்று அம்பாளைத் தொழுவார்கள்.

'முளை கட்டுதல்' என்பார்களே - முளைப் பயிரை, அதாவது ஊற வைத்த நவதானியங்களை, மகம் அன்று துணியில் கட்டி வைத்து, மறு நாள் பூரத்தன்று அதை அம்பாளுக்கு படைப்பார்கள். இதை வாங்கிப் போய் உண்ணும் கன்னிப் பெண்களுக்கு விரைவிலேயே திருமணம் ஆகிறது; பிள்ளைப் பேறு இல்லாதவர்களுக்குப் புத்திர பாக்கியம் கிடைக்கிறது என்று ஒரு நம்பிக்கை.

இதே ஆடிப் பூரத்தன்றுதான், ஸ்ரீவில்லிபுத்தூரில் சூடிக் கொடுத்த

நாச்சியார் எனப்படும் ஆண்டாளின் தேர்த் திருவிழா. ஒரு வகையில் பார்த்தால் ஆண்டாள் வேறு, அம்பாள் வேறு அல்ல என்ற ஐக்கியத்தைச் சுட்டிக்காட்டும் திருநாள்.

ரெட் ஹில்ஸிலிருந்து திருப்பதி செல்லும் வழியில் இருக்கிறது பெரியபாளையம். ஆடி ஞாயிறும், ஆடி செவ்வாயும், வேப்பிலையை ஆடையாகக் கட்டிக் கொண்டு அங்கப் பிரதட்சணம் செய்வார்கள் பெரியபாளையத்தம்மன் கோயிலில். அம்மை போன்ற கொடிய நோய்கள் அண்டாது இருக்க.



• பெரிய பாளையத்தம்மன் கோயிலில்...

ஆடி மாதத்தில் இவை எல்லாம் கொண்டாடக் காரணம், எல்லா ஜீவராசிகளும் கொடிய வியாதிகளால் பாதிக்கப்படும் மாதம் என்பதால்தான். அதனால்தான் குறிப்பாக இந்த மாதத்தில் மாரியம்மனுக்கு அரிசி-வெல்லம் கலந்த துள்ளு மாவு படைத்து, அதைக் குழந்தைகளுக்கு வழங்குகிறார்கள். சருமத்தில் உண்டாகும் கொப்புளங்கள் பொடிப் பொடியாய் உதிர்ந்து விழுவது போல, மாவும் உதிரும். கேழ்வரகும் அரிசியும் கலந்து வைக்கும் கூழில் வெங்காயத்தையும் உரித்துப் போட்டு, அம்மனுக்கு நைவேத்தியம் செய்து, கூழை எல்லாருக்கும் கொடுப்பார்கள், குளுமை பெறட்டும் என்று.

திருமணமான தம்பதியை ஆடி மாதத்தில் பிரித்து வைக்கிறதன் நோக்கம் (முதலிலேயே மாப்பிள்ளைக்குப் பால் பாயசம் கொடுத்துத் தாஜா பண்ணி விடுகிறார்களே!) சித்திரை மாதம், சித்தரா பௌர்ணமி, சித்திரை நட்சத்திரத்தில் மகனோ, மகளோ பிறந்தால் வாழ்க்கையில் களங்கத்தோடு இருப்பார்கள் என்ற நம்பிக்கைதான். அந்த ஒரு நாளுக்காக, ஆடி மாதமே பழியைச் சுமக்கிறது!

தொகுப்பு : **எஸ்.வி.என்.**

படம் : **தம்பையா**

**லா**ரி டிரைவர் உள்ளே வந்து கையைக் கட்டிக் கொண்டு நின்றான்.

''என்னப்பா? என்ன நடந்தது?'' என்றார் ரங்கதுரை.

''சாயங்காலம் தண்ணியை ரொப்பிட்டு புறப்படற சமயங்க... யாரோ ஆபீசர் மாதிரி ஒரு ஆள் தண்ணியை மூனு பாட்டில்லே எடுத்துக்கிட்டு போனார். ஏன் எடுக்கறீங்கன்னு கேட்டா, அரசாங்க அதிகாரி, பரிசோதனை செய்யணும்னு சொன்னாருங்க.''

''அவர் பேர் சொன்னாரா?''

''இல்லைங்க. ஆனா, அவருடைய கார் நம்பர் இதுதாங்க'' என்று நீட்டினான்.

''சபாஷ்... உனக்கு நல்ல மூளைதான்....'' என்று உடனே பாராட்டினார். லாரி டிரைவர் முகம் மலர்ந்தது.

ரங்கதுரை தன் பையிலிருந்து நூறு ரூபாய் நோட்டை அவனுக்குத் தந்து அனுப்பி வைத்தார்.

அந்தக் கார் யாருடையது என்பதை அடுத்த கால் மணியில் ரங்கதுரை கண்டுபிடித்துவிட்டார்.

பிரபு!

அருகிலிருந்த தொலைபேசியை எடுத்து நாலைந்து பேரை வரிசையாகக் கூப்பிட்டுப் பேசினார்.

''அந்த நீலாவை விட்டுட்டீங்க... இப்பப் பிரபுவையும் விட்டா நான் பொல்லாதவனாயிடுவேன்'' என்று கர்ஜித்தார்.

**ம**ற்றவர்களை 'சென்னை செய்தி' ஆபீசில் இறக்கிவிட்டு, பிரபு நேராக,

**12**

ஆராய்ச்சிக் கூடத்துக்குப் போனார். கட்டடத்தின் முன் பகுதியில் காவலாளி நின்று சிகரெட் பிடித்துக் கொண்டிருந்தான். பிரபுவைப் பார்த்து அவன் சிறிது ஆச்சர்யப்பட்டாலும், அவருக்கு மரியாதை செலுத்திவிட்டு, கதவைத் திறந்தான். உள்ளே நுழைந்த பிரபுவின் கையில் மூன்று பாட்டிகளில் தண்ணீர் இருந்தது.

தண்ணீர் பழுப்பு நிறத்தில் இருந்தது. நிறத்தைக் குறித்துக் கொண்டு, பிரபு வேலையில் மும்முரமாக இறங்கினார்.



சோதனைகளின் முடிவில் பிரபுவுக்கு ஆச்சர்யம் மிகுந்தது. கிராமத்திலிருந்து எடுத்து வந்த எல்லா தண்ணீர் 'சாம்பிள்'களையும் பரிசோதித்து முடித்தார். அனைத்திலும் 'மேலதயான்' இருந்தது. அளவு குறைந்தாலும் நிச்சயம் இருந்தது. எவ்வளவு 'மேலதயான்' தண்ணீரில் போட்டார்களோ? குடி தண்ணீரில் 'மேலதயான்' கலக்கப்பட்டும், ஏன் அந்தக் கிராமத்தில் திணிக்கப்பட்ட குடும்பக்கட்டுப்பாடு முயற்சி தோல்வியடைந்தது? யாருமே தண்ணீர் குடிப்பதில்லையா? ஒரு வேளை எல்லோருமே தண்ணீரைக் காய்ச்சிக் குடிக்கிறார்களோ? சூடு செய்யப்பட்ட தண்ணீரில் 'மேலதயான்' அளவு வெகுவாகக் குறையுமே!

எல்லா குறிப்புகளையும், எடுத்துக் கொண்டு பிரபு புறப்பட்ட போது இரவு மணி இரண்டு. காவலாளி இரும்புக் கதவைத் திறந்தான். 'கிறீச்' என்ற சத்தத்துடன் கதவு திறந்து கொண்டது.

''ஏம்பா அந்த இரும்புக் கதவுக்குக் கொஞ்சம் எண்ணெய் போடக் கூடாதா?'' என்றார் பிரபு.

இரும்புக் கதவு! இரும்பு... இரும்பு!! பழுப்பு நிற தண்ணீர்!!!

''தட்ஸ் இட்.... தட்ஸ் இட்.... எல்லாமே புரிஞ்சுட்டது'', என்று பிரபு மகிழ்ச்சிக் கூவலுடன் தம் காரில் ஏறினார்.

ஒருவேளை செங்கோடன் இன்னும் ஆபீசில் இருந்தால்? ஒரு போன் செய்து பார்க்கலாம் என்று வழியில் நிறுத்தினார். 24 மணி நேர போன் வசதியுடைய இடம் திறந்திருந்தது.

''செங்கோடன் பேசறேன்'' என்ற குரல் பிரபுவின் காதில்

தேனாக ஒலித்தது.

"மிஸ்டர் செங்கோடன். நான்தான் பிரபு பேசறேன்... உடனே உங்களைப் பார்க்கணுமே" என்றார்.

"நீலா, சேது, மூர்த்தி எல்லோருமே இன்னும் இங்கேதான் இருக்காங்க.... உடனே வாங்க...." என்று செங்கோடன் சொல்லவே, பிரபுவின் துள்ளல் அதிகமானது.

அமைதியான அந்த இரவு நேரத்தில் பிரபுவின கார் 'சென்னை செய்தி' ஆபீசை நோக்கி விரைந்தது.



"நாம் கிராமத்திலேருந்து எடுத்து வந்த தண்ணீரிலே 'மேலதயான்' நிச்சயம் இருக்கு" என்று சொல்லிவிட்டு அங்கிருந்த ஒவ்வொருவர் முகத்தையும் பார்த்தார் பிரபு. எல்லோருக்கும் குழப்பம் ஏற்பட்டுக் கொண்டிருப்பதைக் கவனித்துச் சிரிக்க ஆரம்பித்தார்.

"நானும் இப்படித்தான் குழம்பினேன். தண்ணீரில் 'மேலதயான்' இருந்தாலும் ஏன் எதிர்பார்த்தபடி அது வேலை செய்யவில்லை என்பது எனக்குப் முதலில் புரியவில்லை. தண்ணீர் 'சாம்பிள்'கள் பழுப்பு நிறமாக இருந்தது உங்களுக்கு நினைவிருக்கிறதா?"

"அப்படியென்றால் அதில் இரும்புச் சத்து இருக்கிறது என்றல்லவா பொருள்" என்றாள் நீலா.

"நிச்சயமாக அந்த இரும்புச் சத்துத்தான் மக்களைக் காப்பாத்தியிருக்கிறது. தண்ணீர் லாரிகளில் இரும்புடன் தண்ணீர் நெடுநேரம் இருப்பதாலும், பொதுவாக தண்ணீரில் இரும்புச் சத்து இருப்பதாலும், மேலதயான் தன் வீரியத்தை இழக்கிறது. இது நான் கண்டுபிடித்த ஆராய்ச்சி உண்மையில்லை. ஏற்கெனவே தெரிந்த உண்மை. அது எனக்கு நினைவுக்கு வந்தபோது நம் பிரச்னையும் தீர்ந்து விட்டது."

"அதாவது கிராமத்தில், குடிநீரில் 'மேலதயான்' இருந்தாலும் இரும்புச் சத்தினால் அது எந்த வகையிலும் உயிரணுக்களை அழிக்கவில்லை என்கிறீர்கள்?" என்று நீலா வினக்கிச் சொன்னாள்.

"என்னுடைய நிச்சயமான முடிவு அதுதான்" என்றார் பிரபு.

ஃபோன் ஒலித்தது.

"ஹலோ... நான் டாக்டர் பிரபுவின் மனைவி சாந்தி பேசறேன்... அவர் அங்கே இருக்காரா?" என்றாள். செங்கோடன் "இருக்கார்... இதோ பேசச் சொல்றேன்" என்றார்.

"என்ன சாந்தி?" என்று கேட்ட பிரபுவுக்கு ஓர் அதிர்ச்சி செய்திதான் கிடைத்தது.

"மாலதியைக் காணவில்லையாம். ஆஸ்பத்திரியிலேருந்து தகவல் வந்திருக்கு" என்றாள் சாந்தி.

"உடனே புறப்பட்டு வருகிறேன்" என்று அவசரமாக அங்கிருந்து வெளியேறியவரை செங்கோடனின் குரல் தடுத்தது.

"டாக்டர் பிரபு... நீங்க அடுத்த இருபத்தி நாலு மணி நேரம் மிகவும் கவனமாய் இருக்கணும். ரங்கதுரை உங்களை சும்மா விடமாட்டான்" என்று எச்சரித்தார், செங்கோடன். "லாரி ஓட்டின டிரைவர் உங்க கார் நம்பரை எழுதினதை கவனிச்சேன்... ரங்கதுரைக்கு விவரம் போயிருக்கும்."

மாண்புமிகு கம்சன்

அறைவாசலிலேயே நின்றிருந்த பிரபு சில நிமிடங்கள் யோசனையில் ஆழ்ந்தார்.

"என்ன செய்யச் சொல்றீங்க?" பிரபு குழப்பத்துடன் கேட்டார். "அங்கே மாலதியைக் காணோமாம்."

"உங்களை கவனமாக இருக்கச் சொல்வது என் கடமை. நாளை காலையில் 'சென்னை செய்தி'யில் வரும் பரபரப்பான செய்தி ரங்கதுரையை என்ன வேணுமானாலும் செய்யத் தூண்டும்" என்றார் செங்கோடன். "உங்க வீட்டுக்கு நான் சில ஆட்களை ஃபோன் பண்ணி அனுப்பறேன். பாதுகாப்பு இருக்கும்...."

பிரபு ஆபீசை விட்டு வெளியேறி கார் கதவைத் திறந்தார். கார் புறப்பட்டது. செங்கோடன் எதிர்பார்த்தது போலவே பிரபுவின் கார் பின் தொடரப்பட்டது. பிரபு வீட்டை அடைந்த போது அங்கு ஏற்கெனவே வந்திருந்த செங்கோடனின் ஆட்கள் பிரபுவைத் துரத்திய ஆட்களைக் கட்டுப்படுத்தித் தங்களுடன் அழைத்துச் சென்றனர். ஆனால் அவர்கள் மூலம் ரங்கதுரையைத் தீண்டலாம் என்ற செங்கோடனின் திட்டம் நிறைவேறவில்லை. ரங்கதுரையே பிரச்னையைத் தீர்த்துவிடுவார் என்று யாரும் அப்போது எதிர் பார்க்கவில்லை!

**ம**றுநாள் 'சென்னை செய்தி' காலைப் பதிப்பைப் படிக்காதவர்களே இல்லை! சென்னையை மட்டுமில்லாமல் இந்தியாவையே குலுக்கிவிட்ட செய்திகள் வெளிவந்திருந்தன.

முதல் பக்கமே பரபரப்பூட்டியது. அதில் ரங்கதுரையின் படம், டாக்டர் பிரபுவின் படம். நிருபர் நீலா எழுதிய செய்தி. கொட்டை எழுத்துக்களில் தலைப்பு.

'மக்கள் தொகையைக் குறைக்க பூச்சிக் கொல்லியைப் பயன்படுத்த பயங்கரத் திட்டம்... கொடூர முறையில் குடும்பக் கட்டுபாடு செய்ய விவசாய அமைச்சர் ஆராய்ச்சியாளரை நாடி...." என்று தொடங்கி நீலா எழுதியிருந்தாள். பாலுவும் சாலமனும் ரங்கதுரைக்கு மறைமுகமாக உதவி செய்தார்கள் என்பதையும் நிருபித்தாள் நீலா.

பத்திரிகை நிருபர்கள் அமைச்சர் ரங்கதுரையின் வீட்டைச் சூழ்ந்தனர். இன்னும் சில நிமிடங்களில் ரங்கதுரை அவர்களுக்குப் பேட்டி கொடுக்க இருந்தார். நீலாவும் மூர்த்தியும் முன் வரிசையில் காத்திருந்தனர்.

"காங்கிராட்ஸ், நீலா..." என்று நிருபர்கள் பாராட்ட ஆரம்பித்தனர்.

"தாங்க்யூ; எல்லாவற்றுக்கும் ஆசிரியர் செங்கோடனின் உறுதியும் விடா முயற்சியும் தான் காரணம்."

ரங்கதுரை வெளியே வந்தார்.

'பளிச், பளிச்'சென காமிராக்கள் இயக்கப் பட்டன. மூர்த்தியும் ரங்கதுரையை பல வித கோணங்களில் படம் எடுத்துக் கொண்டிருந்தான்.

**ர**ங்கதுரை பேச ஆரம்பித்தார்.

"நீங்கள் எதற்காக இங்கே வந்திருக்கிறீர்கள் என்பதை நான் அறிவேன். நான் கொடுத்த அறிக்கையை ஏற்காமல் 'சென்னை செய்தி' பத்திரிகை தானாகவே ஒரு செய்தியையும் சில கட்டுரைகளையும் வெளியிட்டிருக்கிறது. அதற்கெல்லாம் காரணம் நிருபர் நீலாதான் என்பது உங்களுக்குத் தெரியும்." ரங்கதுரையின் குரலில் கோபமா இல்லை வருத்தமா என்பது மற்றர்களுக்குப் புரியவில்லை.

"நாங்கள் கேள்விகளைக் கேட்கலாமா?"

"நான் சொல்ல வேண்டியதைச் சொன்ன பின் கேள்விகள் இருக்காது" என்று பீடிகை போட்டார் ரங்கதுரை.

அங்கு அமைதி ஏற்பட்டது. எல்லா கண்களும் ரங்கதுரையின்மேல் நிலைத்தன. காமிராக்கள் மீண்டும் மீண்டும் கிளிக்கின.

விவசாய அமைச்சர் என்ற முறையில் நான் பிரபுவின் ஆராய்ச்சிகளில் ஆர்வம் காட்டினேன். அவர் 'மேலதயான்' பற்றி பேசியபோது ஒரு திட்டம் போட்டேன். அந்த மருந்தை எலி ஒழிப்புத் திட்டத்துக்குப் பயன்படுத்தலாம் என்று எனக்குத் தோன்றியது. பிரபுவுக்குத் தெரியாமலே இந்தக் 'குடும்பக் கட்டுப்பாடு திட்டத்தை நான் பரிசோதனை செய்ய ஆரம்பித்தேன்."

அங்கிருந்த நிருபர்கள் நீலாவை மரியாதையுடன் பார்த்தனர்.

"நிருபர் நீலா எழுதியது சரிதான். திட்டம் நிறைவேறினால் எனக்குப் புகழ் வரும். அதனால் பயங்கர விளைவுகள் ஏற்படுமாயின் பிரபுவின் மேல் பழி என்று நான் நினைத்தது உண்மைதான்... இதன் நடுவில் பாலு, சாலமன் இருவருமே என் வலையில் கலபமாக விழுந்தார்கள். எனக்குத் தேவையான சில விவரங்களைத் தந்ததைத் தவிர அவர்கள் வேறெந்தத் தவறையும் செய்யவில்லை."

"நீங்கள் செய்ததற்குக் காரணம் புரியவில்லையே?"

"காரணம் நம்மைச் சுற்றிலும் இருக்கிறதே! இந்தியா முழுதும் கோடிக்கணக்கில் காரணங்கள் இருக்கின்றனவே.... மக்கள் தொகையைத்தான் சொல்கிறேன்! குக்கிரா

ஸ்ரீஹரி
ஓம் நமோ பகவதே வாஸுதேவாய

# ஸ்ரீ ஸாந்தீபனி குருகுலா டிரஸ்ட்

**கோகுல், நெ. 24, நேதாஜி நகர், ஜாபர்கான்பேட்டை,**
**சென்னை - 600 095**

குருஜி ஸ்ரீ முரளீதர ஸ்வாமிகள் மிஷன் சார்பில் சென்னை வளசரவாக்கத்தில் சாம வேத பாடசாலையும் யஜுர் வேத பாடசாலையும் ஸ்ரீ ஸாந்தீபனி குருகுல டிரஸ்டின் கீழ் ஆரம்பித்து நடந்து வருகின்றது. மேற்படி பாடசாலைக்கு வித்யார்த்திகளை அனுப்பி வைத்தும், பொருளாகவோ, பணமாகவோ உதவி செய்தும் வேத மாதாவின் அனுக்ரஹத்திற்கு பாத்திரர்களாகும்படி கேட்டுக் கொள்கிறோம்.

V. சங்கரன்
டிரஸ்டி.

நன்கொடைக்கு வருமான வரி விலக்கு உண்டு (Sec. 80 G of I. Tax Act)

**நன்கொடையை மேலே குறிப்பிட்டுள்ள முகவரிக்கு அனுப்புமாறு அன்புடன் கோருகிறோம்.**



# புள்ளகுட்டிக்காரன்

பார்த்திபனுக்கு ஊருக்கு உதவும் கேரக்டர். முன்பாதியில் ஆறேழு குழந்தைகளுக்கு உதவுகிறார். இதற்கு ஒரு காரணம். அதற்கு ஒரு பிளாஷ்பேக். கடைசியில், ஹீரோ செத்துப் போவதோ, போலீஸில் மாட்டிக் கொள்வதோ, தமிழ் சினிமா பாரம்பரியத்துக்கு ஒவ்வாது என்பதால், சந்தோஷமாய் முடிக்க முயற்சி செய்திருக்கிறார்கள்.

கதையை ஒதுக்கி விட்டுப் பார்த்தால், படம் ஜாலியோ ஜாலி. பார்த்திபனுக்கே உண்டான காமெடி. ஆபாசம் இல்லாதிருப்பது பெரும் நிம்மதி. மனைவியாய் ஊர்வசி. குழந்தைக்காக ஏங்கும் இக்குவாய். கேட்க வேண்டுமா? மனத்தில் சட்டென ஒட்டிக் கொள்கிறார். படம் முழுவதும் சங்கீதாவும் இருக்கிறார். போதாததற்கு மலையாளத்திலிருந்து சீனிவாசன், வீட்டிலிருந்து நாகேஷ் என்று எல்லோரையும் கூட்டி வந்திருக்கிறார்கள்.

ஆர்ட் டைரக்டரை ஒருமுறை பாராட்டி விடுவோம். படத்தில் பெரும்பகுதி அவரின் கலை வண்ணம்தான். அடுத்த கைவண்ணம் பன்னீர் செல்வத்தினுடையது. மனுஷன் எங்கேதான் லைட்டிங் வைக்க கற்றுக் கொண்டாரோ? பளிச்சிடுகிறார். அடுத்த உழைப்பு, தேவாவினுடையது. ஒவ்வொரு பாடலும் இனிமை. குறிப்பாய் 'மெட்டி மெட்டி...' திக்கித் திக்கிப் பாடும் ஜானகி மீண்டும் ஆஜர்.

இதுவரை பரமசாதுவாய், நியாயம் பக்கம் நிற்கும் பழமாய் வந்து கொண்டிருந்த சந்திரசேகர், இதில் வில்லன் பிரமோஷன் பெற்றிருக்கிறார். வாய்ப்பு கம்மி. பெட்டர் லக் நெக்ஸ்ட் டைம்!

கண்ணீரும் கம்பலையுமில்லாமல், லேசான சோகத்தோடு வீட்டுக்கனுப்புகிறார் பார்த்திபன். இதுவரை சிரிக்க வைத்து சந்தோஷப்படுத்தியதற்கு ஒரு சல்யூட். வாழ்க்கெல்லாம் நமக்கெதுக்கு சார்!

— துளசி

மங்களிலிருந்து மாநகரங்கள் வரை மக்கள்... மக்கள்.... மக்கள்.... அரசு எத்தனை ஆண்டுகள்தான் குடும்பக் கட்டுப்பாடு திட்டத்தைப் பற்றி எடுத்துச் சொல்வது?: நம் நாட்டில் அது வெற்றி பெறுகிற காரியமாய் இல்லையே! அதனால்தான் சுலபமான முறையில், இனியாவது மக்கள் தொகை பெருகாமலிருக்க 'மேலதயான்' பயன்படட்டுமே என்று திட்டம் போட்டேன்."

"மக்களின் ஒப்புதலில்லாமலேயே அவர்களைப் பரிசோதனைக் குள்ளாக்கினீர்கள். அது சட்டத்துக்கு விரோதமான செயல் என்பது ஒருபுறம் இருக்கட்டும். மனித இனத்துக்கே இழுக்கான செயல் இல்லையா?" ஒரு நிருபர் துடிப்புடன் கேட்டார்.

"நாடு மக்களால் ஆனது; நாட்டை நடத்துவதும் வீழ்த்துவதும் மக்கள்தானே... தெரிந்தோ தெரியாமலோ மக்கள் நாட்டின் வளத்துக்கு உதவட்டுமே என்றுதான் நான் அதைச் செய்தேன்... இந்தியாவின் ஆயிரக் கணக்கான கிராமங்களில் 'மேலதயானை' கவனமாய்ப் பயன்படுத்தினால் மக்கள் தொகை வளர்வது தடைப்படும்; நாட்டின் வளத்தைப் பகிர்ந்து கொள்ளலாம் - இதுதான் என் லட்சிய வெறியாகியது." ரங்கதுரை ஆவேசமாகப் பேசினார்.

"அதாவது விஞ்ஞானத்தை அரசியலுக்குப் பயன்படுத்த முற்பட்டீர்கள்... உங்கள் புகழ் உச்சியை நாடிப் போகப் போக, மக்களின் அடிப்படை உரிமைகள் பள்ளத்தில் விழப்பார்த்தது." நிருபர்கள் விடவில்லை. உரிமைக் குரல்கள் ஒலித்தன.

"நான் இப்போது செய்தது பரிசோதனைதான். முறைப்படி அதை நான் செய்யவில்லை என்பதாலும், செய்யக்கூடிய 'விஞ்ஞானி' என்ற தகுதி எனக்கில்லை என்பதாலும் என் மீது குற்றம் சாட்டுகிறீர்கள். அதை நான் ஏற்றுக் கொண்டு அமைச்சர் பதவியிலிருந்து இப்போதே விலகிக் கொள்கிறேன். ஆனால் ஒன்று. என்றாவது ஒரு நாள் நம் நாட்டில் குடும்பக் கட்டுப்பாடுத் திட்டம் வெற்றியடையும் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு; அதுதான் இந்திய நாடு முன்னேற்றப் பாதையில் நடக்கும் முதல் நாளாகும்" என்று முடித்துவிட்டு ரங்கதுரை வீட்டுக்குள் போனபோது அனைவரும் அவரை வியப்

புடன் பார்த்துக் கொண்டே நின்றனர்.

## 13

சில நாட்களுக்குப் பிறகு....

டாக்டர் பிரபுவின் வீடு.

செங்கோடன் உள்ளே நுழைய அவர் பின்னால் நீலா, சேது, மூர்த்தி மூவரும் சென்றனர்.

"வாங்க மிஸ்டர் செங்கோடன்... நீங்க என் கணவருக்குச் செய்த உதவியை என்னிக்கும் மறக்க மாட்டேன். ரொம்ப நன்றி" என்று சாந்தி வரவேற்றாள்.

குரல்கள் கேட்டு வந்த பிரபு விரைந்து செங்கோடனின் கையைப் பற்றிக் கொண்டார்.

"ரொம்ப ரொம்ப நன்றி எடிட்டர் சார்... இதுவரை பத்திரிகைகள் செய்தியைப் பரப்பமட்டும்னு நான் நினைச்சிருந்தேன். உங்கள் பத்திரிகை போன்றவை மக்களுக்கு எப்படியெல்லாம் பயன்படுகின்றன என்பதை சொந்த அனுபவத்திலே தெரிஞ்சுக்கிட்டேன்."

அவர்கள் பேசிக் கொண்டேயிருந்த போது கோபு அங்கே ஓடிவந்தான். அவன் பின்னாலேயே பிரபுவின் குழந்தைகளும் ஓடிவந்தனர். அறையில் பெரியவர்கள் பலரும் பேசிக் கொண்டிருந்ததைப் பார்த்ததும் குழந்தைகள் வேறு திசையில் ஓட ஆரம்பித்தனர். கோபு வாசலை நோக்கி ஓடினான். எதிரே வந்து கொண்டிருந்த ஒரு பெண் மீது முட்டிக் கொண்டான்.

"அடடே! கோபு, பார்த்து ஓட வேண்டாமா?" என்றாள் அந்த அம்மாள்.

சட்டென்று கோபு நின்றான். அந்த அம்மாளைப் பார்த்து, "என் அம்மா எப்போ ஆஸ்பத்திரியிலிருந்து வருவாங்க?" என்றான்.

அவள் பதில் கூறாமல் பிரபுவைப் பார்த்தாள்.

"வாங்க.... டாக்டர்" என்று வந்தவளை பிரபு அழைத்தார். மற்றவர்களுக்கு அறிமுகம் செய்து வைத்தார். "இவங்க மாலதியை மரணத்தின் வாயிலிருந்து காப்பாற்றி, உடல் நிலை தேறும் வரை ஆஸ்பத்திரியில் கவனித்துக் கொண்ட டாக்டர். ஆனா மாலதிதான் திடும்மென்று காணாமல் போயிட்டா..." ஏக்கத்துடன் பேசினார் பிரபு.

"மாலதியைக் கண்டுபிடிக்க நாம முயற்சி மட்டும்தான் எடுக்க முடியும்.. அவங்களே திரும்பி வந்தாத்தான் உண்டு" என்று ஒரு கடிதத்தை அவள் கொடுத்தாள். "நேற்று மாலை மாலதி படுத்திருந்த கட்டிலுக்குப் பக்கத்திலிருந்த சிறிய மேடை டிராயரையெல்லாம் துடைத்து ஒழுங்கு செய்ய முற்பட்டபோது கிடைத்தது. தாமதமாக அகப்பட வேண்டும் என்றே அங்கு வைத்திருக்கிறாள் போல..." என்றாள் டாக்டர்.

மாலதியின் கடிதத்தைப் படித்த பிரபு, அதை, சாந்தியிடம் கொடுத்தார். அவளும் படித்துவிட்டு கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

'இனி கோபி உங்கள் சொத்து சாந்தி. அவனைப் பெற்றது மட்டும்தான் நான். வருகிறேன் என்று கூடச் சொல்லாமல் புறப்பட விரும்புகிறேன்' - மாலதி.

மாலதியின் வாழ்க்கையைப் போலவே அவளுடைய கடிதமும் சுருக்கமாக இருந்தது.

அதுவரை அங்கு நின்று கொண்டிருந்த கோபி சட்டென்று சாந்தியிடமிருந்த கடிதத்தைப் பறித்துக் கொண்டான். படித்தான். கீழே எறிந்துவிட்டு அழத் தொடங்கினான்.

"இனிமே என் அம்மாவை நான் பார்க்கவே முடியாது... பார்க்கவே முடியாது."

கோபுவின் அழுகை அங்கிருந்த அனைவரின் இதயத்தையும் கண்டி இழுத்தது.

பிரபு எழுந்து போய் கோபுவை அணைத்துக் கொண்டார். கோபு அழுதபடியே விலகினான்.

சேது மெல்லச் சென்று கோபுவின் மீது கையை வைத்து "கோபு... கோபு... நீ ரொம்ப நல்ல பையனாச்சே... எங்ககூட கொஞ்ச நாள் வந்து இருக்கியா?" என்றான்.

கோபு கண்களைத் துடைத்துக் கொண்டு சேதுவை ஏறிட்டுப் பார்த்தான். சேதுவின் அருகில் நீலாவும் வந்து நின்றாள். அவள் கண்கள் பனித்தன.

கோபு அம்மாவைத் தேடினான்; சேதுவும் நீலாவும் வாழ்க்கையில் தவறிப் போன குழந்தைச் செல்வத்தைத் தேடுகிறார்கள்.

கோபுவுக்கு நீலா தாயாக முடியுமா? காலம் பதில் சொல்லட்டும்.

(முற்றும்)

---



"ரேஷன் கடைல நீங்க என்ன வேலை பாக்குறீங்க....?"

"புழு, பூச்சி, கல்லு, மண்ணு சேர்க்குறதுங்க!"

— ஆர்.பி. செல்வம்



ஐசிஎஸ் R. நடராஜன்
நிர்வாக இயக்குநர்

# ஐசிஎஸ்

## பெனிபிட் பண்ட் லிமிடெட்

இந்திய அரசின் அங்கீகாரம் பெற்ற நிதி நிறுவனம்
பதிவு அலுவலகம் : "ஐசிஎஸ் ஹவுஸ்" 21 வெங்கிடசாமி சாலை
ஆர்.எஸ்.புரம், கோயமுத்தூர் 641 002




55 ஆண்டுகளுக்கு
மேலான
அரிய சேவை

## குறுகிய கால டெபாசிட் திட்டம்

| காலம் | வட்டி விகிதம் ஆண்டுக்கு |
|---|---|
| ஒருநாள் முதல் 12 மாதங்கள் வரை | **14%** |

டெபாசிட் தொகையை எப்போது வேண்டுமானாலும் உரிய வட்டியுடன் திரும்பப் பெற்றுக் கொள்ளலாம்.

## சுபிட்சம் வைப்புத் திட்டம்

ரூ. 10,000/- செலுத்தினால் 48 மாதங்களில் ரூ. **21,000/-** கிடைக்கிறது.

## பிக்சட் டெபாசிட் திட்டம்

| காலம் | 12 மாதங்கள் | 24 மாதங்கள் | 36 மாதங்கள் | 48 மாதங்கள் | 60 மாதங்கள் |
|---|---|---|---|---|---|
| ஆண்டுக்கு ஒரு முறை வட்டி | 18% | 18.5% | 19% | 19.5% | 20% |
| மாதம் ஒரு முறை அல்லது 3 மாதத்திற்கு ஒரு முறை வட்டி | 16% | 16.5% | 17% | 17.5% | 18% |

## தங்க நகைகள் பேரில் கடன் பெற நேரில் அணுகவும்

சேகரிப்பு மையங்கள் :
- 221, சத்தியமூர்த்தி சாலை, ராம் நகர், கோயமுத்தூர் - 641 009.
- 11/2, செட்டிப்பாளையம் சாலை, போத்தனூர், கோவை - 641 023
- 8/11, மேட்டுப்பாளையம் சாலை, பெரியநாயக்கன்பாளையம், கோவை -641 020
- 52-B-3, கரட்டூர் சாலை, (ஸ்டேட் பேங்க் எதிரில்) ரங்கசமுத்திரம், சத்தியமங்கலம் - 638 402
- K.C.P. காம்ப்ளெக்ஸ், கீழ்த்தளம், 153-G, மேட்டூர் சாலை, ஈரோடு - 638 011

பங்குதாரர்களுடன் மட்டும் பரிமாற்றம்

HAYMARKET

நான்கு தலைமுறை வாடிக்கையாளர்களின் நம்பிக்கையைப் பெற்ற ஐசிஎஸ் குழுமத்தின் ஓர் அங்கம்!



# நானற்ற நான்!

நான்
அறியாமையை ஒப்புக்கொண்டேன்
அறிவில்லாதவளென்றார்கள்...
நான்
அமைதியாயிருந்தேன்
அகங்காரியென்றார்கள்
நான்
உணர்வுகளை ஒருமுகப்படுத்தினேன்
இதயமில்லாதவளென்றார்கள்...
நான்
இயலாமையை ஒப்புக்கொண்டேன்
எதற்கும் லாயக்கற்றவளென்றார்கள்...
நான்
அறியாததை அறிந்ததாக
தெரியாததை தெரிந்ததாக
அமைதியின்றி ஆர்ப்பாட்டமாக
பின்னால் பழித்து
எதிரில் சிரித்து
வேஷம் போட்டேன்...
இவளல்லவோ பெண்ணென்றார்கள்!
ஆயின்
நான்தான்
வேஷமே விலங்காய் நெருங்க
மூச்சுத் திணறி
முடிந்து போனேன்.

—பூங்குழலி கண்ணன்

# கொஞ்ச நேரம்...

அப்பா மடியில்
அமர்ந்து பேசி
அநேக நாளாச்சு!

அம்மாவோடு அருகமர்ந்து
கொஞ்சி விளையாடியது
மறந்தே போச்சு!

பாட்டி மடியில் முகம்புதைத்து
கதைகேட்டுத்
தூங்கிய காலம்
கனவாய்ப் போச்சு!

இன்றாவது
எல்லோரும் வீட்டில்
இருக்கும் வேளையில்
மின்தடை ஏற்பட்டு
தொலைக்காட்சி கொஞ்ச நேரம்
மௌனமாகுமா?
நாங்கள் பேசிக்கொள்ள
கொஞ்சநேரம் கிடைக்குமா?

—வடுவூர் சிவ. முரளி





# எதிர்பார்ப்பு

**மா**மா, மாமி முகங்களில் ஒரு உணர்ச்சியுமில்லை. அதே போல்தான் தேவநாதனும். வெறுமனே கல்யாணியைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். குனிந்த தலைநிமிரவில்லை. குள்ளம். கெட்டி கண்ணாடி. கறுப்பு. அழகு என்று சொல்ல முடியாத உருவம்.

முப்பத்திரண்டு வயது வரை தனியாய் நின்றதும் அதனால்தான். என்னென்னவோ எதிர்பார்ப்புகள். அழகு, கொள்ளை அழகு, பூவாய்ச் சிரிக்கும் அழகு என்று பலப்பல எண்ணங்கள். எதையும் நிறைவேற்றுபவன் அல்ல இவன் என்று பங்கஜத்துக்குத் தோன்றியது.

இப்போது இவர்களும் உணர்ச்சிகாட்டாமலிருக்கிறார்கள். கண்டிப்பாய் 'போய் லெட்டர் போடுகிறேன்' கேஸ்.

தேவநாதனோடு கல்யாணியின் அப்பா பேசிக் கொண்டிருக்கிறார். விவஸ்தையற்ற மனிதர். ஊர்க் கதையெல்லாம் அளந்து கொண்டிருக்கிறாள். சட்டுபுட்டென்று முடிவைக் கேட்டு விட வேண்டியதுதானே?

கல்யாணி அப்படியே குனிந்திருந்தாள். பாவமாய் இருந்தது பங்கஜத்துக்கு. பக்கத்து அறைக் கதவு தட்டப்பட்டது. அஷோக் எழுந்து விட்டானா? பங்கஜத்துக்கு பயம் பற்றிக் கொண்டது.

தட்டும் ஓசை அதிகரித்தது. எல்லோர் கவனமும் கதவை நோக்கியே இருந்தது. தெளிவற்ற குரலும் கேட்டது. கல்யாணி எழுந்து கதவைத் திறந்தாள்.

தலை ஒன்று எட்டிப் பார்த்தது. சளி ஒழுகும் மூக்கு. என்னவோ சைகை காட்டிச் சொல்லிற்று. கல்யாணி தோள் கொடுத்துத் தூக்கினாள். கைத்தாங்கலாய் நடத்திச் செல்ல, மனமும் உடலும் வளர்ச்சியற்ற குழந்தை என்பது தேவநாதனுக்குத் தெரிந்தது.

பங்கஜத்துக்குப் பயமாய் இருந்தது. இவன் இன்னொரு குறை. கல்யாணிக்குத் திருமணம் தள்ளிப் போவதற்கு இதுவும் ஒரு காரணம். இன்று வெளியே வரக் கூடாது என்று அறையில் தூங்க வைத்திருந்தாள்.

பங்கஜத்துக்கு நம்பிக்கை போய் விட்டது. தலையெழுத்து என்பது இது தானோ?

"அஷோக்னு பேரு. என் ரெண்டாவது பிள்ளை. பொறந்ததுலேர்ந்து இப்படியே இருக்கான். நான் பண்ண பாவம்."

தானே சொல்லிக் கொண்டாள் பங்கஜம். மாமா வெறுமனே தலையாட்டினார். மீண்டும் உணர்ச்சியற்ற நிலை. கல்யாணி, அஷோக்கை அழைத்து வந்து, கூடத்தில் உட்கார வைத்தாள். கை கால் ஈரத்தைத் துடைத்தாள். சுவரில் சாய்ந்து கொண்டான். தேவநாதனைப் பார்த்துச் சிரித்தான்.

"அப்போ கௌம்பலாமா?" மாமி மெல்ல கிசுகிசுத்தாள். மாமா எழுந்து கொண்டார். கூடவே கல்யாணி அப்பாவும். பங்கஜத்துக்கு மனசு அடித்துக் கொண்டது.

"அப்போ, நான் அப்புறம் வீட்டுக்கு வரட்டுமா?" கல்யாணி அப்பா ஆரம்பித்தார்.

"எதுக்கு வீணா? எனக்கு ஓ.கே. உங்க பொண்ணுக்கு ஓ.கே.வான்னு கேளுங்கோ, போதும். எனக்கு சிம்பிளான மேரேஜ் போதும்."

சிரித்துக் கொண்டே தேவநாதன் சொல்ல, ஆச்சரியம் அனைவர் முகத்திலும்.

"ஒரு பொண்ணுக்குத் தேவை அழகு மாத்திரமில்லை. கருணையான அப்ரோச். அது உங்க பொண்ணுகிட்ட நிறையவே இருக்குங்கிறதைத் தம்பியை முகங்கோணாம கூடத்துக்குக் கொண்டு வந்ததலேர்ந்து தெரியுது. அது போதும் எனக்கு."

அப்பாவிடம் கையை இறுக்கிக் குலுக்கினான் தேவநாதன். வார்த்தைகளற்று பங்கஜம் நின்றாள்.

— ஆர். வெங்கடேஷ்

**THE CHARACTER YOU CREATE IS IN YOUR HANDS; BUT THE SUCCESS OF YOUR CREATION IS NOT IN YOUR HANDS.**

**- A HOLLYWOOD DIRECTOR -**

அன்று இரண்டாவது ஞாயிற்றுக் கிழமை. மாலை மணி 5 இருக்கலாம். ஏதோ எழுதிக் கொண்டிருந்தேன். வீட்டில் வேறு யாருமில்லை. கதவு படபடவென்று தட்டப் படும் சப்தம் கேட்டது.

காலிங்பெல்லை அடிக்காமல் யார் இப்படி கதவைத் தட்டுகிறார்கள்? என்ன அநாகரிகம்? தட்டப்படும் ஓசையைக் கேட்டால் யாரோ ஏழெட்டுப் பேர் சேர்ந்து கதவைத் தட்டுவது போலிருந்தது. அஸ்தியில்

# கே. பாலசந்தர்

ஜுரம் கண்டு விட்டது. போய்க் கதவைத் திறந்தேன்.

ஒரே பெண்கள் கூட்டம்... முண்டியடித்துக் கொண்டு எல்லோரும் உள்ளே வந்தார்கள்.

எண்ணிப் பார்த்தேன். மொத்தம் 14 பேர் இருந்தார்கள்.

எங்கோ பார்த்த முகங்களாக இருந்தன.

"யார் நீங்கள்?"

"என்ன ஸார்! டபாய்க்கிறீங்க! எங்களைத் தெரியாதா உங்களுக்கு?"

"என்ன வேணும் உங்களுக்கு?"

"எல்லாருமா சேர்ந்து உங்களைக் கூண்டிலே நிறுத்தி வச்சு தண்டனை கொடுக்க வந்திருக்கோம்!"

"நான் என்ன தப்பு செய்தேன்?"

"தெரியாதது மாதிரி கேட்கிறாரு பாரு?" - ஒருத்தி.

"இவரை ரெண்டு நாள் ஜெயில்லே வச்

# 52

சாக்கூட போதும்; அப்பத்தான் என் மனசு ஆறும்!" - இது இன்னொருத்தி.

"ரெண்டு நாள் மட்டும் ஜெயில்லே வச்சுட்டு வெளியே வர விட்டுட்டா அப்புறம் பெரிய தியாகி ஆயிடுவாரு!"

"என்னைத் தெரியலையா? நான்தான் மரோசரித்ரா ஸ்வப்னா."

எனக்கு அடையாளம் தெரிந்தது. மற்றவர்களையும் பார்த்தேன். ஒவ்வொருவராகப் புரிந்தது. நான் படைத்த பெண் கதாபாத்திரங்கள் எல்லோரும் ஒன்றுகூடிப் பேசிக் கொண்டு என்னிடம் சண்டை பிடிக்க வந்திருக்கிறார்கள்!

நல்ல உச்ச இராகுகாலம். வசமாக மாட்டிக் கொண்டேன்.

**மரோசரித்ரா – ஸ்வப்னா:**

கடைசியிலே என்னைச் சாக அடிச்சீங்க! ரொம்ப சரி! லவ்ஸ்டோரியா இருந்தா 'டிராஜடி'யாகத்தான் இருக்கணும்னு சொல்வீங்க. இருக்கட்டும். ஆனா எதுக்கு ஸார் அந்த வில்லனை விட்டு என்னை 'ரேப்' பண்ணச் செய்து, அப்புறமா என்னைச் சாக அடிச்சிருக்கீங்க? நான் சாகிறப்பொ புனிதமா ஒரு கன்னிப் பெண்ணா சாகக் கூடாதா?

(பதில் சொல்ல ஆரம்பித்தேன். "மௌனம் மௌனம்" என்று மனசாட்சி வலியுறுத்தியது. அதற்குள் அடுத்தவள் ஆரம்பித்தாள்.)

**புன்னகை மன்னன் – மாலினி (ரேவதி) :**

எல்லாத்தையும் விட எனக்கு இவர் செஞ்சதுதான் படுகொடுமை! தப்புப் பண்ணவங்களுக்கு poetic justice கொடுப்பாங்க கேள்விப்பட்டிருக்கோம். நான் என்ன தப்பு பண்ணேன்? என்னை ஏன் கொன்னாரு கடைசியிலே?

**சிந்து பைரவி – சிந்து:**

நீங்களாம் பரவால்லே! என் கேஸை எடுத்துக்குங்க. நானும் JKB ரெண்டு பேரும் தான் கோட்டைத் தாண்டினோம். தப்பு எங்க ரெண்டு பேர் மேலேயும்தான். ஆனா அந்தம்மா பைரவி அதான் முதல் மனைவியே எங்க கல்யாணத்தைப் பண்ணி வைக்கத் தயாராகத்தானே இருந்தா! அதை ஏன் நான் வேண்டாம்னு சொல்லணும்?

**மரோசரித்ரா – ஸ்வப்னா:**

ஒருவனுக்கு ஒருத்திங்கிறதை வலியுறுத்தறாரு.

**சிந்துபைரவி – சிந்து:**

At whose cost? அதுக்கு நான்தான் கிடைச்சேனா?

**அவள் ஒரு தொடர்கதை – கவிதா:**

அதுக்குத்தான் உன் வாய் வழியாவே 'டயலாக்' போட்டாரு. திருமணம்ங்கிற Institutionஐக் காப்பாத்தணும்னுட்டு.

**சிந்து பைரவி – சிந்து:**

நான் ஒத்துக்கவே மாட்டேன். ரெண்டு பெண்டாட்டியைக் கல்யாணம் பண்ணிக்











கிட்டு எத்தனையோ பேர் அமைதியா குடும்பம் நடத்தலியா? எதுக்கு நான் மட்டும் அலையோரமா நடந்து போயிட்டிருக்கணும்? விளக்கம் கேட்காம நான் விடப் போறதில்லே...

(நான் பதில் சொல்லத் தொடங்கும் முன் நினைவு வந்தது. Argument is exchange of ignorance. நான் தர்க்கத்தில் ஈடுபட விரும்பவில்லை; இந்த இடத்தில் எடுபடும் என்கிற நம்பிக்கையும் எனக்கில்லை. வாய் மூடி மௌனியானேன்.)

**அவள் ஒரு தொடர்கதை – கவிதா:**

அதெல்லாம் இருக்கட்டும்! என்னை எடுத்துக்குங்க! நான் எதுக்கு கடைசிலேயும் தியாகம் பண்ணணும்? குடும்பத்துக்கு உழைச்ச வரைக்கும் போதாதா? 'அக்கடா'ன்னு அந்த பணக்காரனைக் கல்யாணம் பண்ணிக்கிட்டு சந்தோஷமா இருந்துட்டுப் போறேன். எனக்குத் தாலி கட்ட இருந்தவனை இன்னொரு தங்கச்சிக்குத் தாலி கட்ட வைக்கிறேனாம்! நல்ல கதையா இருக்கே!

**மரோசரித்ரா – ஸ்வப்னா:**

அப்புறம் எப்படி ''அவள் ஒரு தொடர் கதை'' ஆகும்?

**அவள் ஒரு தொடர்கதை – கவிதா:**

என் தங்கச்சியைக் கட்டிக்கிறதுக்கு அவன் எப்படி 'திடுதிப்'புன்னு சம்மதிப்பான்னு கேட்கிறேன்.

**சிந்துபைரவி – சிந்து:**

இப்ப என்ன, அன்னிக்கே கேட்டே; அதுக்குப் பதில் சொல்லத் தெரியாமத்தான் நீ பேசறது மேலே நாதஸ்வர சவுண்டைப் போட்டு விட்டுட்டாரு.

**மரோசரித்ரா – ஸ்வப்னா:**

அப்போ குடும்பத்துக்காகத் தியாகம் பண்றது தேவையில்லைங்கிறியா?

**அவள் ஒரு தொடர்கதை : கவிதா:**

தியாகமாவது மண்ணாங்கட்டியாவது;

அதெல்லாம் Out of fashion இப்போ!

**அக்னிசாட்சி – கண்ணம்மா:**

அதெல்லாம் இருக்கட்டும், எனக்கு பதில் சொல்லுங்க ஸார் முதல்லே! நான் பாரதி யார் மேலே ரொம்ப ஈடுபாடு கொண்டவள்னு சொன்னீங்க. கணவனோட போய் டிபன் சாப்பிடற ஓட்டல்ல இன்னொரு ஆம்பிளை என்னைப் பாத்து அசடுவழிந்தான். நேரா போய் அவன் கன்னத்திலே அடிப்பானா எவனாவது?

**மரோசரித்ரா – ஸ்வப்னா:**

டூ மச்!

**அக்னிசாட்சி – கண்ணம்மா:**

டூ மச் இல்லே, த்ரீ மச் ஸ்வப்னா! கடைசியிலே குழந்தையைப் பெத்துக் குடுத்தேன். அப்புறம் ஏன் என்னைச் சாக அடிக்கிறாரு!

**புன்னகை மன்னன் – மாலினி:**

Sympathy! ரசிகர்களோட அனுதாபத்தைப் பெற்றுத் தராரு!

**அக்னிசாட்சி – கண்ணம்மா:**

Sympathy ஏற்படுத்த கொல்லணுமா கதா நாயகியை?

**மனதில் உறுதி வேண்டும் – நந்தினி:**

நல்லவேளைம்மா! என்னைக் கொல்லாம விட்டாரு இவரு.

**அக்னிசாட்சி – கண்ணம்மா:**

என்ன ஸார் இவ்வளவு கேட்கிறோம்! ஒரு கேள்விக்கும் பதிலே காணும்? வாயிலே என்ன கொழுக்கட்டையா?

(நான் இதற்கும் மௌனம்தான் சாதித்தேன்.)

**மனதில் உறுதி வேண்டும் – நந்தினி.**

என் கதையைக் கேட்டேயில்லே! பாவம் நான் விவாகரத்து ஆகி இன்னொருத்தனோட நெருக்கம் ஏற்பட்டு கல்யாணம் வரைக்கும் போச்சு. நான் கல்யாணம் பண்ணிக்கிறது இந்த ஆளுக்குப் பொறுக்கவே இல்லை.

**மரோசரித்ரா – ஸ்வப்னா:**

Jealousy போல இருக்கு அவருக்கு.

(எல்லோரும் சிரிக்கிறார்கள்.)

**மனதில் உறுதி வேண்டும் – நந்தினி:**

என்னைக் கல்யாணம் பண்ணிக்க இருந்த அவன் என்ன கேட்டான் பெரிசா? SPB டாக்டர்கிட்டே போய், 'ஒரு கிட்னி தானமாக் கொடுத்திருக்காளே, இவ. தாம்பத்திய உறவுக்கு அது பாதகம் எதுவும் ஏற்படுத்துமா?'ன்னு கேட்டிருக்கான். எந்த ஆம்பளை கேட்காம இருப்பான். அதுக்காகக் கல்யாணமே வேண்டாம்னு நான் முடிவு எடுத்துடணுமா?

**அவள் ஒரு தொடர்கதை – கவிதா:**

உன்னைப் பொறுத்தவரைக்கும் கே.பி. செஞ்சதுதான் கரெக்ட்.

---

# மக்கள் நலனுக்காக ஒரு மாநாடு!

**டா**க்டர் உதய மூர்த்திக்கு முகமெல்லாம் பூரிப்பு. காரணம் சென்னையில் நடந்த மக்கள் சக்தி இயக்கத்தின் மாநில மாநாடு. எட்டு வருடமாக இயக்கம் துவங்கிச் செயல்பட்டதற்குப் பலனாக, ஒரு dedicated group உருவாகி வருவதைக் காண்கிறாரே! சொந்தச் செலவில் சென்னை வந்து மாநாட்டில் கலந்து கொண்டார்கள் இயக்கத் தொண்டர்கள். காலையில் துவங்கி, மாலை வரை ஒரு கட்டுப்பாடோடு அமர்ந்து, எல்லோர் பேச்சையும் கேட்ட பாங்கு. அதிலும் குறிப்பாக மதியம் இரண்டு மணிக்கு நடந்த நிபுணர்களின் கருத்தரங்கம். சாப்பிட்டு விட்டு கண்ணைச் சொருகுகிற நேரம். ஆனால் விழிப்புடன் நிபுணர்களின் கருத்துக்களை கேட்டுக் கொண்டார்கள் தொண்டர்கள். மாநில மாநாடு இந்த முறை முக்கியத்துவம் கொடுத்தது தென்னக நதிகளை இணைப்பது குறித்துத்தான். (சென்னை உயர்நீதி மன்றமும் இது குறித்து யோசிக்க வேண்டுமென்று சமீபத்தில் கூறியுள்ளதும் கவனத்துக்குரியது.) ஏற்கெனவே நிபுணர்களைக் கலந்து கொண்டு சாத்தியங்களைப் பற்றி இயக்கம் கொடுத்த அறிக்கை மத்திய அரசின் பரிசீலனையில் இருக்கிறதாம்.

- ஆண்டுதோறும், மகாநதி, கோதாவரி, கிருஷ்ணா, காவிரி, மற்றும் பாலாறு, பெண்ணாறு ஆகிய ஆறுகளில் 3000 கோடி கன அடி தண்ணீர் வீணாக ஓடி கடலில் கலந்து விடுகிறது.
- தமிழ்நாட்டில் ஒரு கோடியே முப்பது லட்சம் ஹெக்டேர் விவசாய நிலங்கள் உள்ளன. அதில் 60 லட்சம் ஹெக்டேர் நிலம்தான் பயன்படுத்தப்படுகிறது.
- இந்த அறுபது லட்சத்திலும் ஆறுகளால் பயன்பெறும் நிலப்பரப்பு 25 லட்சம் ஹெக்டேர்தான்.
- தென்னக நதிகளை இணைக்க 20,000 கோடி ரூபாய் செலவாகுமாம். (அரசியல்வாதி

**மனதில் உறுதி வேண்டும் – நந்தினி:**

என்ன கரெக்ட்?

**அவள் ஒரு தொடர்கதை – கவிதா:**

இந்த ஆம்பளைகளுக்கு அப்படித்தான் நெத்தியடி அடிக்கணும்; அப்பத்தான் அவுங்களுக்குப் புத்தி வரும்!

**அச்சமில்லை – தேன்மொழி:**

கணவன்மார்களுக்கு புத்தி வராப்ல செய்ய வேண்டியதுதான். அதுக்காகப் புருஷனையே கொல்லணுமா? என் கேஸிலே அப்படித்தான் பண்ணினாரு!

**மனதில் உறுதி வேண்டும் – நந்தினி:**

இல்லாத அக்கிரமம் எல்லாம் பண்ண ஆரம்பிச்சானே உன் புருஷன். கட்சி மாற லஞ்சம் வாங்கினானே!

**அச்சமில்லை – தேன்மொழி:**

யார் வாங்கலே! கட்சி மாறுவதற்கு இப்பல்லாம் சூட்கேஸ் கை மாறுது. கோடிக் கணக்கிலே பேசற காலத்துலே ஒரு லட்சம் ரெண்டு லட்சம் எல்லாம் லஞ்சமே இல்லை; கையிலே எலுமிச்சம் பழம் வைக்கிற மாதிரி; ஒரு மரியாதை அவ்வளவுதான். கத்தியை மாலையிலே மறைச்சு வச்சு... மாலை போடறாப்ல போட்டு கத்தியை உருவி... தன் புருஷனையே எந்த மனைவி அப்படிச் செய்வா?

**அவள் ஒரு தொடர்கதை – கவிதா:**

நானா இருந்தா அப்படித்தாம்மா செய்வேன்.

**அச்சமில்லை – தேன்மொழி:**

தாலி கட்டின புருஷனையே கொன்னுடுவியா?

**அவள் ஒரு தொடர்கதை – கவிதா:**

ஆமாம்! எனக்குத் தப்பாத் தெரியலே!

**அச்சமில்லை – தேன்மொழி:**

அதான் உன்னை... ரா...ட்...ச...ஸி...ன்னான் உன் தம்பிப் பையன்.

**அவள் ஒரு தொடர்கதை – கவிதா:**

நாக்கை அடக்கிப் பேசும்மா.

**புதுப்புது அர்த்தங்கள் – ஜோதி (சித்தாரா):**

அடாடா! நமக்குள்ளே சண்டை பிடிக்கவா இங்கே வந்தோம்? படைப்பாளியை ஒரு புடி புடிக்கிறதை விட்டுட்டு... ஏன் ஸார்... என்னவோ புதிசா எங்க கதையிலே பண்ணப் போறீங்களாக்கும்னு நினைச்சா... வலுக்கட்டாயமா என்னை விட்டே அந்த பைத்தியம் கௌரியையும் மணிபாரதியையும் சேர்த்து வச்சு... இதுக்கா இரண்டரை மணி நேரம்... என்ன ஸார் நீங்க... உங்களுக்கு முதுகெலும்பே இல்லையா?

(மற்ற எல்லோரும் "ஆமாம் ஆமாம்" என்று கோரஸாகக் குரல் எழுப்புகிறார்கள். நான் பதில் சொல்லியே ஆக வேண்டுமென்று கனைத்துக் கொண்டேன். மன

---

கள் பெறும் கமிஷனையும் சேர்த்தா டாக்டர்?)

**தெ**ன்னக நதிகளின் இணைப்பை வலியுறுத்தி இதுவரை மூன்று பாதயாத்திரைகளை நடத்தியிருக்கிறார் உதயமூர்த்தி. இது சாத்தியம்தானா? நடக்கக்கூடிய காரியமா? என்று யாராவது கேட்டால், 'நம்மால் முடியும் தம்பி... நம்பு' என்று வைட்டமின் மாத்திரை தருகிறார்.

"சோ போன்ற புத்திசாலிகள் அரசியலுக்கு வராததால்தான் விரும்பத்தகாத சக்திகள் அரசியலுக்கு வந்து நாட்டைப் பாழ்படுத்தி வருகின்றன" என்று உயதமூர்த்தி பேசியதற்கு பதிலளிக்கும்விதமாக சோ, "நான் சீரியஸாக செயல்படுபவன் அல்ல; அபிப்ராயங்கள் சொல்லி விட்டு அடுத்த வேலையை பார்த்துக் கொண்டு போகிறவன். முன்பு தேர்தல் கூட்டத்தில் அரசியலில் சேருவேன் என்று சொன்னேன். அது வெறும் தேர்தல் வாக்குறுதிதான். இப்போது புரிந்திருக்கும்" என்று கண் சிமிட்டினார்.

இயக்கத்துக்காக நீலமும், சிவப்பும் கலந்த கொடியை அறிமுகப் படுத்தினார் உதயமூர்த்தி. "இனி சின்னத்தைச் சொல்லி தேர்தலில் நிற்க வேண்டியது தான் பாக்கி!" என்று கிண்டல் செய்தார் சோ.

- ஸ்ரீநிவாசன்

சாட்சி மீண்டும் குரல்வளையைப் பிடித்தது. மீண்டும் மௌனம்.)

**கல்யாண அகதிகள் – அம்முலு:**

எனக்கும் ஒரு சான்ஸ் குடுங்க. நான் புடிக்கிறேன் ஒரு புடி இவரை. ஏன் சார்? பிள்ளை வீட்டுக்காரங்க என்னை மதம் மாறச் சொன்னா என்ன பெரிசா தப்பாப் போச்சு? காலம் இருக்கிற இருப்பிலே மதமா ஸார் முக்கியம்? வாழ்க்கைதான் முக்கியம்.

**மனதில் உறுதி வேண்டும் – நந்தினி:**

உன் கேஸிலே 'மதமாற்றம்'ங்கிறது பிரச்னையில்லே! உன் பெண்ணுரிமையை ஏன் நீ விட்டுக் கொடுக்கணும்?

**கல்யாண அகதிகள் – அம்முலு:**

அது என்ன புடலங்காய் பெண்ணுரிமை! கிராமத்திலேருந்து ஓடி வந்த இந்த அம்முலுவுக்கு இவ்வளவு பெரிய பணக்கார இடம் கிடைக்குமா? எதையும் practical ஆ பார்க்கணும்.

**அரங்கேற்றம் – லலிதா:**

கரெக்டா சொன்னே அம்முலு! பிராக்டிகலாத்தான் பார்க்கணும். எனக்கு வாழ்வு கொடுத்தாரில்லே அந்த சிவகுமார். அப்புறம் ஏன் ஸார் திடீர்னு டால்டா டப்பாவைத் தட்டிக்கிட்டு சமுத்திரக் கரையைப் பார்க்க ஓட வச்சீங்க? எனக்கு ஏன் ஸார் பைத்தியம் புடிக்கணும்? என் சம்பாத்தியத்துலே நல்ல வாழ்க்கையை அமைச்சுகிட்ட என் தம்பி தங்கச்சி அவுங்களுக்குப் புடிக்கட்டும் பைத்தியம்.

**கல்யாண அகதிகள் – அம்முலு:**

கேட்டா poetic justice ம் பாரு!

**அரங்கேற்றம் – லலிதா:**

எத்தனை கேரக்டரைக் கொல்றாரு இவரு! இவருக்கு என்ன poetic justice? இவருக்குப் புடிக்கட்டுமே பைத்தியம்!

**அவர்கள் – அனு:**

வெல்செட் லலிதா! நீங்களாவது அப்படி இப்படி இருந்த கேரக்டருங்க. நான் என்ன செஞ்சேன் பாவம்! என் கதையிலே கடைசி வரைக்கும் என் மேலே உயிரையே வச்சிருந்தாரே அந்த சீனியர் (கமல்) அவரைக் கல்யாணம் பண்ணிக்க விட்டாரா என்னை? பெண்கள் சந்தோஷமாவே இருக்கப்படாது

இவருக்கு. என்னைக் கேட்டா என் மாஜி புருஷன் ராமநாதனை விட இந்த கே.பி.தான் sadistன்னு சொல்வேன்.

("வெல்செட்", "வெல்செட்" என்று கூட்டத்திலிருந்து பல குரல்கள்.)

**தப்புத் தாளங்கள் – சரசு:**

பெண்களை அழ விட்டு வேடிக்கை பார்க்கிறதுலே கில்லாடி இவரு. கல்யாணம் ஆகி 'செட்டில்' ஆகப் போறேன்னு நினைச்சுகிட்டிருக்கிற நேரத்துலே ரஜினியை ஜெயிலுக்கு அனுப்பிட்டு மறுபடி நான் அதே தொழிலுக்குப் போயிடறேனாம்! இது நியாயமா ஸார்? அதுக்கு என்னை சாக அடிச்சிருக்கலாம்ல? இல்லை, எனக்குப் பைத்தியம் புடிக்கிறதா வச்சிருக்கலாம்ல?

**அவர்கள் – அனு:**

எத்தனை கேரக்டரைத்தான் பைத்தியம் புடிக்க வைப்பாரு?

**புன்னகை மன்னன் – மாலினி:**

அப்புறம் "பைத்தியம் பாலசந்தர்"ன்னு அவருக்குப் பேர் வந்துரும்!

**வானமே எல்லை – கற்பகம் (மதுபாலா):**

என்னைப் பேசவே விட மாட்டீங்களா! என்னைக் கிழவனுக்குக் கல்யாணம் பண்ணிக் கொடுத்தாரு. ஓடிப் போய் ரயில் தண்டவாளத்துலே விழுந்தேன். அதையே நான் ஒத்துக்கலே. நான் ஏன்ய்யா சாகணும்(?) கண்காணாத இடத்துக்கு ஓடிப் போய் எங்கேயாவது உத்தியோகம் பாத்து நான் பிழைச்சுக்க மாட்டேனா?

**மனதில் உறுதி வேண்டும் – நந்தினி:**

அதுக்குள்ளேதான் ரயில்வே லைன் ஓரமா விழுந்து கிடந்த ரம்யாகிருஷ்ணனைப் பார்த்துட்டியே!

**வானமே எல்லை – கற்பகம்:**

சரி, பார்த்துட்டேன்; அப்பொ ரெண்டு பேருமே சேர்ந்துகிட்டு எங்கேயாவது போய் இட்லி கடை வச்சுப் பிழைக்கலாம்ல! அதென்னது 100 நாள் வாழ்ந்துட்டு கூண்டோட கைலாசம்கிற மாதிரி எல்லாருமா சேர்ந்து தற்கொலை பிளான்? சுத்த நான்சென்ஸ்!

**தப்புத் தாளங்கள் – சரசு:**

தற்கொலை பண்ணிக்கவிருக்கிற இளை

ளுர்களுக்கு உங்க வழியாப் புத்தி சொல்லி யிருக்காரு.

(இதுவரை பேசாமலிருந்த அந்த மூத்த கேரக்டர் அபூர்வ ராகங்கள் MRB பேச ஆரம்பிக்கிறாள்.)

**அபூர்வ ராகங்கள் – MRB:**

பிரசன்னா என்னை லவ் பண்ணான்...

சரி! கல்யாண வயசுலே எனக்கு ஒரு பொண்ணு இருந்தா... ரஞ்சனி.

ரஞ்சனி பிரசன்னாவோட அப்பாவை விரும்பினா. சரி! குழப்பமான உறவுகள்தான் வரும்!

கைகொட்டிச் சிரிப்பார்கள். Right!

கடைசியிலே நான் என்ன பண்ணியிருக்கலாம்? என் பொண்ணைக் கூப்பிட்டு... அதான் ரஞ்சனியைக் கூப்பிட்டு பிரசன்னா (கமல்) கையைப் புடிச்சுக் கொடுத்து இளசுகள் ரெண்டு பேரையுமாவது சேர்த்து வச்சு மங்களம் பாடியிருக்கலாம்ல?

**தப்புத் தாளங்கள் – சரசு:**

அதான் 'மங்களம்'னு போட்டு கேள்விக் குறியோட முடிச்சிருந்தாரே!

**அவள் ஒரு தொடர்கதை – கவிதா:**

அதெப்படிம்மா அந்த முரடன் கேரக்டர் பிரசன்னா இதுக்கு ஒத்துக்குவான்?

**அபூர்வராகங்கள் – MRB:**

என்ன பெரிய கேரக்டர்? ஏன் நீ கேட்கலியா? நான் மட்டும் ஏன் தியாகம் பண்ணணும்னு. நீ என்ன கேரக்டர் அப்பொ?

**அவள் ஒரு தொடர்கதை – கவிதா:**

என் கேரக்டர் பத்திப் பேச நீ யாருடீ!

**அபூர்வராகங்கள் – MRB:**

ஆமாம்! கேரக்டரே இல்லாதவங்க கிட்டே போய் கேரக்டர் பத்தி என்ன பேசறது?

**அவள் ஒரு தொடர்கதை – கவிதா:**

பல்லை உடைப்பேன்! எனக்கா கேரக்டர் இல்லேங்கிறே? சரசு மாதிரி நான் என்ன தப்புத்தாளமா?

**தப்புத்தாளங்கள் – சரசு:**

உங்க சண்டையிலே என்னை ஏன் இழுக்கிறீங்க! நாக்கை இழுத்து வச்சு அறுத்துடுவேன். நீ மட்டும் பெரிய பதிவிரதையா?

**மனதில் உறுதி வேண்டும் – நந்தினி:**

அய்யய்ய! இது என்னது குழாயடிச் சண்டை மாதிரி?

**தப்புத் தாளங்கள் – சரசு:**

பின்னே என்ன? யாரைப் பாத்தாலும் சன்னு புன்னுன்னு விழுவா இந்தக் கவிதா...

"பெண்கள் கல்யாணத்துக்கு முன்னாலே கர்வமா இருக்கலாம்; கர்ப்பமாத்தான் இருக்கக் கூடாது"ன்னு எந்தப் பொம்பிளையாவது வரப் போற மாமியார்கிட்டே சொல்வாளா?

**கல்யாண அகதிகள் – அம்முலு:**

கவிதாவோட வாயேதான் அவளுக்கு விரோதி.

**அவள் ஒரு தொடர்கதை – கவிதா:**

அதான் என் கேரக்டர்.

**அரங்கேற்றம் – லலிதா:**

அதான் வாழ்க்கையே உனக்கு சரியா அமையலே!

**அவள் ஒரு தொடர்கதை – கவிதா:**

ச்சீ! வாயை மூடுடி... உனக்கு மட்டும் அமைஞ்சுதா! டால்டா டப்பாவை அடிச்சுகிட்டு நிக்கிறே கடைசியிலே. பேச வந்துட்டா?

சண்டை வலுக்கிறது. ஒருவருக்கொருவர் காரசாரமாகப் பேசிக் கொள்கிறார்கள். அவையனைத்தும் சபைக் குறிப்பிலிருந்து நீக்கப்படும் சட்டசபை proceedings போல் இங்கே நீக்கப்பட்டிருக்கின்றன.

இவர்களது சண்டையைப் பயன்படுத்திக் கொண்டு நான் தலைமறைவானேன்.

திரும்பி வந்து பார்க்கும் போது எல்லோருமே போய் விட்டிருந்தார்கள். வீட்டின் சுவரில் ஒரு பொன் மொழியை சாக்கட்டியினால் எழுதி விட்டுப் போயிருக்கிறார்கள்.

"படிக்காத முட்டாளை விட படித்த முட்டாள் மோசமானவன்" - மோலியர்.

நான் படித்த முட்டாளா?

பேசியதற்குத்தான் யாருமே வருத்தப்பட்டிருக்கிறார்களே தவிர பேசாமல் மௌனம் சாதித்ததற்காக யாரும் வருத்தப்பட்டதில்லையென்பது இன்னொரு பொன் மொழி.

ஆனால் மௌனமாக இருந்து விட்டதற்காக நான் இந்த முறை வருத்தப்பட்டேன்.

இவர்களது குற்றப் பத்திரிகைகளிலிருந்து ஒன்று மட்டும் புரிந்தது.

ரொம்பவும் Ideal characterகளாக இருக்க பெண்கள் யாரும் விருப்பப்படவில்லை. யதார்த்தமாக இருக்கத்தான் விருப்பப்படுகிறார்கள்; யதார்த்தம் என்றால் எல்லாவற்றிற்கும் compromise பண்ணிக் கொண்டு... அனுசரித்துப் போய்க் கொண்டு...

ஆனால் -

Every woman has her masculine side

Every man has his feminine side.

ஆம்! ஒவ்வொரு ஆணுக்கும் பெண்மைக் குணம் நிறைந்த மறுபக்கம் இருக்கிறது.

பெண்களை idealவாதிகளாகக் காட்டத்தான் எனது மறுபக்கம் எப்பொழுதும் என்னை வற்புறுத்துகிறது.

Tail Piece :

இது கற்பனையா அல்லது கனவா? இது ஒரு Loud thinking. கட்டுரைத் தொடர் முடிய இருக்கும் தருவாயில் இது என்னைப் பற்றிய ஒரு negative analysis. 'நினைவலைகள்' தொடர் அடுத்த இதழில் நிறைவு பெறுகிறது.

# ஜெ.-'புரட்சித் தலைவலி' என்கிறாரே சு. சுவாமி...?

● என் ஸ்ரீநிவாசன், விழுப்புரம்

*? 'இட ஒதுக்கீடு சிக்கலுக்கு என்னிடம் நல்ல தீர்வு இருக்கிறது. என்னை முதல்வராக்கினால்தான் அதை நான் வெளியே சொல்வேன்' என்கிறாரே பண்ருட்டியார்...?*

! 'நாட்டின் பிரச்னைகளுக்கெல்லாம் என்னிடம் தீர்வுகள் உள்ளன. என்னைப் பிரதமராக்கினால்தான் விளக்கிச் சொல்வேன்' என்று நீங்களும் சொல்லிக் கொள்ளுங்களேன், ஸ்ரீநிவாசன்.

● மு. இரவிச்சந்திரன், சேலம்-9.

*? ஆகஸ்ட் பதினைந்தாம் தேதி கச்சத்தீவில் கொடி ஏற்றப் போகிறாராமே டாக்டர் ராமதாஸ்?*

! அப்படி அவர் செய்து, இலங்கை அரசு அவரைக் கைது பண்ணுவதற்கு முன், நமது அரசே அவரைத் தடுத்து நிறுத்திவிட வேண்டும். அதுதான் நம் நாட்டுக்குக் கௌரவம்.

● சி.கொ.தி. முருகேசன், கோபி.

*? தாதா சாகேப் பால்கே விருதுக்கு, சிவாஜி கணேசன் பெயரை அனைத்திந்திய திரைப்பட அதிபர்கள் சம்மேளனம் ஒருமனதாகச் சிபாரிசு செய்திருந்தும், அந்த விருதை திலீப் குமாருக்கு மத்திய அரசு வழங்கிவிட்டதே?*

! தகுதியுள்ள ஒரு நபருக்குத்தான் அந்த விருது தரப்பட்டுள்ளது என்பது ஆறுதல். எனினும், ஏகமனதான சிபாரிசை மீறி அரசு செயல்பட்டுள்ளது கண்டனத் துக்குரியது. அடுத்த ஆண்டாவது பரிகாரம் தேடுனால் சரி!



• ஆறுதல்

● அம்பி தம்பி, சென்னை-48.

*? அண்மையில் உங்களைச் சோகத்துக்கு உள்ளாக்கிய நிகழ்ச்சி...?*

! ஜுரத்துக்கு ஊசி போட்டபோது ஊசி முனை உடைந்து உடலுக்குள்ளேயே தங்கிவிட, பன்னிரண்டு மணி நேரம் துடியாய்த் துடித்த சிறுமி பற்றிய செய்தி. நுகர்வோர் விழிப்புணர்வு உள்ள திருச்சியில் நடந்ததால் சம்பவம் வெளிப்பட்டுள்ளது. சின்ன ஊர்களிலும் கிராமங்களிலும் இது போல் எவ்வளவு சோகங்கள் அஜாக்கிரதை காரணமாக நடக்கின்றனவோ!

● எம். சந்திரசேகர், மேட்டுமகாதானபுரம்.

*? உச்சநீதிமன்றத் தீர்ப்பு குறித்து சேஷன் வாய் திறக்காதது பற்றி...?*

! மௌனமாக யோசிக்கிறார் போலும். யோசனையின் முடிவாக, தேர்தல் கமிஷனில் தொடர்ந்து பதவி வகிக்க அவர் தீர்மானித்தால் நல்லது. இல்லாவிட்டால் இவ்வளவு நாட்களாகப் போராடிப் பெற்ற வெற்றிகள் அர்த்தமின்றிப் போய்விடும். மற்ற இரு தேர்தல் கமிஷனர்களுடன் ஒருங்கிணைந்து நற்பணிகளைத் தொடர்ந்தால் நன்றாக இருக்கும்.

● சி. ராஜேந்திரன், சின்ன சேலம்.

*? வில்லன் சத்யராஜ், ஹீரோ சத்யராஜ், டைரக்டர்*

• வாத்தியாருக்கு மார்க்!



• "முதல்வ ராக்கினால்..."



• கச்சத்தீவு நோக்கி....



• மூன்று அவதாரங்கள்



**நீங்கள் கேட்டவை — தராசு**



• சாம்பியன்கள்...



• ...ஆட்டம்!

சத்யராஜ்...?

! 1) ஜீரா, 2) ஜோரா! 3) ஜீரோ!

● டி. பசுபதி, ஊஞ்சவேலாம்பட்டி.

? விம்பிள்டன் போட்டியில் இந்த ஆண்டும் வென்று 'ஹேட் ட்ரிக்' சாதனை புரிந்த பீட் சாம்ப்ராஸ் பற்றி...?

! எதிர்த்து ஆடிய பெக்கர், ஆட்டத்தின் இடையிலேயே, சாம்ப்ராஸ் அடித்த பந்தைத் தேடுவது போல் பாவனை காட்டி, அவருடைய ஆட்டத்தின் வேகத்தையும் சிறப்பையும் உணர்த்தினாரே... அதைவிட உயர்ந்த பாராட்டு என்ன இருக்க முடியும்...?

● த. குணசேகரன், கவுந்தப்பாடி.

? 'ஜெயலலிதா புரட்சித் தலைவி அல்ல... புரட்சித் தலைவலி' என்கிறாரே சு. சுவாமி?

! அரசியல் நாகரிகம் கருதி 'புரட்டுத் தலைவி' என்று சொல்லாமல் விட்டு விட்டார் போலும்!



• புதிய கொள்கை?

● ச. அ. கேசவன், இனாம் மணியாச்சி ☐

? அரசியலால் நாடு கெடுகிறதா? நாட்டால் அரசியல் கெடுகிறதா?

! ரயில்வே அமைச்சகத்துக்கென்று ஒரு விமானம் வாங்கினார் ஜாஃபர் ஷெரீஃப். அவசியமற்ற அந்த ஆடம்பரப் பொருளைச் சகட்டு மேனிக்கு உபயோகித்து, மக்களின் வரிப் பணத்தை வீணடித்ததற்காக மத்திய தணிக்கைக் குழு அறிக்கை கண்டனம் தெரிவித்துள்ளது. அரசியல்வாதிகள் ஜாஃபர் ஷெரீஃப் போல் நடந்து கொள்ளும் போது அரசியலால் நாடு கெடுகிறது. பொது மக்கள், தணிக்கைக் குழு அறிக்கை போன்றவற்றைக் கண்டு கொதித்தெழாமல் அசிரத்தையாய் இருக்கும்போது நாட்டினரால் அரசியல் கெடுகிறது!

● ஆர். சங்கரநாராயணன், குணசீலம்.

? 'பாக் அரசியலில் ஊழல் மலிந்து விட்டது! எனவே நான் அரசியலில் ஈடுபட மாட்டேன் என்கிறாரே இம்ரான்கான்?

! ஆட்டத்தில் மட்டுமே ஊழல் செய்யலாம் என்பது அண்ணன் கொள்கை போலும். வாழ்க சோடாபுட்டி மூடி!

● எஸ். நாகராஜன், மேலப்பாதி.

? ஆறாவது முறையாக வெற்றி பெற்றிருக்கும் ஸ்டெபி கிராஃப் ஆட்டம் பற்றி?

! கவிதை போன்ற ஆட்டம். ஆனால் வெற்றி ஸ்டெபிக்கு என்றாலும் அனுதாபம் முழுதும் சான்சஸுக்குத்தான்! அற்புதமாக ஆடி, முதன் முறையாய் விம்பிள்டன் இறுதிப் போட்டியை எட்டியும் சாம்பியன் பட்டம் கை நழுவி விட்டதே!

● ஆர். மங்களம், கும்பகோணம்.

? விஞ்சி நிற்பது 'கோயில் கொள்ளைகளா குடமுழுக்கு விழாக்களா?' என்று பட்டி மன்றம் வைத்தால்...?

! மேடைக்கடியில் குண்டு வெடிக்கும்!

● கே.கே. வெங்கடேசன், வேலூர்-4.

? 'எழில்மிகு சென்னை இரண்டாயிரம்' எப்படி இருக்கும்...?

! நடைபாதைகள் நடப்பதற்கு லாயக்கற்று இருக்கும், சாலைகளில் மழைநீர் தேங்கும், குடிசைகள் பெருகும், வழிப்பறி நடக்கும், கூவம் மணக்கும்!

● த. முகிலன், மணலூர்ப்பேட்டை.

? எங்கள் ஊர்ப் பகுதியில் சில காலமாக மின்சாரத் தட்டுப்பாடு உள்ளது. சென்னையில் எப்படி.?

! உங்கள் பாடு தேவலாம் ஐயா! மின்சாரத் தட்டுப்பாடு காரணமாக இங்கே நங்கநல்லூர், பழவந்தாங்கல் போன்ற புறநகர்ப் பகுதிகளில் குடிநீர் விநியோகமும் அல்லவா பாதிக்கப்பட்டுக் கொண்டிருக்கிறது.

● இரா. கல்யாணசுந்தரம், மதுரை-9.

? கோக்கோ கோலா, பெப்ஸி கோலா- இவையிரண்டில் சுவை அதிகமுள்ளது எது?

! அதுக்குக் கொடுக்கும் பணத்தை ஒரு இளநீருக்குக் கொடுத்தால் தாகமும் அடங்கும், உடம்புக்கும் நல்லது.

● எஸ். இந்திரா, ஸ்ரீரங்கம்.

? 'கையளவு மனசு' இரண்டாம் பாகம் எப்படி...?

! தமிழ் வாத்தியார் வாலிக்கு நூற்றுக்கு நூறு இல்லாவிட்டாலும் தொண்ணூற்றைந்து மார்க் நிச்சயம் தரலாம்.

☐ ரூ. 25 பரிசு பெறுபவர்:
ச.அ. கேசவன்,
39-B, பை-பாஸ் சாலை,
இனாம் மணியாச்சி,
கோவில்பட்டி -627 702.

## நா. நாகராஜன்

# தொடரும் உறவுகள்

கடிதம் கைக்குக் கிடைத்த போது எட்டு நாட்கள் உருண்டு ஓடி விட்டன. அண்ணன் உயிர் பிரிந்து, பழைய முகவரிக்குப் போய் - அட்ரஸ் அடித்து - திருத்தி எழுதி பிறகு பார்வதியின் கைக்கு வந்திருக்கிறது.

வசதி இல்லாத தங்கைதானே - வர முடியுமோ என்னமோ முந்நூறு கிலோ மீட்டர் கடந்து என்கிற அக்கறையில் பிரிண்டட் கார்டை மூன்று நாட்கள் கழித்துப் பழைய அட்ரஸிற்கு போஸ்ட் செய்திருக்கிறார்கள்.

மாமியார் வந்து "என்ன பார்வதி, ஏன் ஒரு மாதிரி இருக்கே.." என்று தோளைத் தொட்ட போது அழுகை பிறிட்டுக் கிளம்பியது.

"அம்மா... அண்ணன் காலமாயிட்டாராம்..."

அவர்களுக்கும் அதிர்ச்சிதான். இருந்தாலும் வாழ்க்கையில் எத்தனையோ இழப்புகளைப் பார்த்து அனுபவப்பட்டவர் என்பதாலும், பையனுக்கும் பெண்ணுக்கும் கல்யாணம் பண்ணி பேரன் பேத்தி பார்த்து விட்ட பெரியவர் என்பதாலும் பார்வதி மாதிரி இடிந்து போகவில்லை.

ஒரு வாரமாக உடம்பு சரியில்லாமல் படுத்து இருக்கும் பார்வதியின் கணவர் உள்ளிருந்து அம்மாவைக் கூப்பிடுவது மெலிதாகக் கேட்கிறது.

"என்னவாம்..."

சொன்னார்கள்.

"எப்பவாம்..."

வீட்டுக்குள் உட்கார்ந்து பேசக் கூட இடம் இல்லாமல் க்ளீனிங் பவுடர் மூட்டை மூட்டையாக இடத்தை அடைத்துக் கொண்டிருந்தது.

கண்ணாடி கவர்களும், தராசும் ஒரு பக்கம்.

இவைகளை நிறுத்து கவரில் போட்டு கடை கடையாக, வீடு வீடாக ஏறி இறங்கி விற்றால்தான் வீட்டில் அடுப்பெரியும்.

வயதுக்கு வந்து விட்ட இரண்டு பெண்களும் கூட ஒத்தாசை செய்திருக்கிறார்கள்.

கடைசி பையன் ஸ்கூலுக்கு போய் வருகிறான். பெண்கள் இரண்டும் பார்வதி மாதிரி நிதானம் காக்க, பையன்தான் புத்தகம், சினிமா, டூர் என்று நிறைய செலவு வைக்கிறான்.

குற்றால சீசனின் போது அண்ணன் ட்ரெயினில் குடும்பத்துடன் வரும்.

பிறகு வேன் பிடித்து சாப்பாடு கட்டி ஜாலியாக எல்லாரும் எல்லா அருவிகளிலும் போய்க் குளித்து வருவார்கள்.

அண்ணனுக்கு பிசினசில் ஓய்வு கிடைக்காது என்பதாலும், பார்வதி வீட்டை விட்டுச் செல்ல முடியாது என்பதாலும், வரும் போதெல்லாம் செலவு முழுக்க அண்ணனுடையது.

கண்டிப்பாக சாப்பாடு பார்வதிதான் சமைத்து எடுத்து வர வேண்டும். பையனுக்கு ட்ரெஸ், பெண்களுக்கு தாவணி, புடைவை என்று நிறைய செலவு செய்யும்.

கடந்த இரண்டு வருடங்களாகத்தான் அண்ணன் வரவில்லை.

பார்வதியின் சில அவசரக் கடிதங்களுக்கு கூட பதிலில்லை.

எல்லாவற்றிற்கும் சேர்த்து ஒரு முற்றுப் புள்ளியாய் இன்று இந்தக் கடிதம்.

பெண்கள் வந்ததும் ஆலோசனை ஆரம்பமானது.

"போகணும் இல்லியா...?"

"கண்டிப்பா.."

பார்வதிதான் சொன்னாள்.

"எவ்வளவு லேட்டா எழுதி இருக்காங்க. தந்தி கொடுத்தா என்னவாம்?"

சின்னவள் கோபப்பட்டாள்.

"தந்தி குடுத்தாலும் போற நிலைமையிலா நாம இருக்கோம்..." மூத்தவள்.

"அது நம்ம இஷ்டம். கடனோ உடனோ வாங்கிப் போகணும்னு நினைச்சா போகலாம் இல்லையா... மாமிக்கு வேண்டாம்னு தோன்றி இருக்கும்...."

"மாமியே கவலையிலே இருந்திருப்பாங்க."

"அட... மாமா உடம்பு சரியில்லாம

இருந்தப்பவே எழுதி இருக்கலாம் இல்லையா...''

"உன்னால தனியாகப் போக முடியுமா பார்வதி..."

''நம்ப கணேஷை மட்டும் கூட்டிக்கவா...''

"அம்மா நானும் கூட வரவா..." சின்னவள்.

"மூன்று பேர் போகணும்னா ஆயிரம் ரூபாய் ஆயிடும். அப்பா உடம்பு சரியில்லை. பாட்டியால சமாளிக்க முடியாது. நீங்க ரெண்டு பேரும் பிசினஸைப் பார்த்துக்கோங்க. மூணு நாள்ல திரும்பிடுவோம்."



ட்ரங்குப் பெட்டியைத் திறந்து பெரியவளின் செயினுக்கென சேர்த்து வைக்கப்பட்டிருந்த பணத்தில் ஆயிரத்தி இருநூறு கனத்த மனதுடன் பார்வதி எடுத்து வைத்துக் கொண்டாள்.

பையன் நிமிடத்தில் தயாராகி விட்டான்.

ஒரு சின்ன சூட்கேஸில் துணிகளுக்குக் கீழாக பாதிப் பணத்தை பர்சுடன் வைத்து விட்டு மீதியை ஒரு சின்ன கவரில் போட்டு ரவிக்கைக்குள் வைத்துக் கொண்டாள்.

ஸ்கூல் பெரிய லீவு முடிந்து திறந்து நாளாகி விட்டபடியால் பஸ்ஸில் கூட்டம் அதிகமில்லை.

வண்டிதான் பழைய டப்பா வண்டி.

அண்ணன் எத்தனையோ முறை குழந்தைகளை கூட்டிக் கொண்டு ஊருக்கு வரச் சொன்னது மனதில் வந்து போனது.

அவன் கணவனையும் தன்னுடன் பிஸினசில் சேர்த்துக் கொள்ள வற்புறுத்தியும் அவர் பிடிவாதமாகத் தனியே தொழில் செய்து கஷ்டப்படுவது மனதுக்கு வேதனையாகத் தான் இருக்கிறது.

யார் சொல்ல... யார் கேட்க, பார்வதியின் மாமியார் வைத்ததுதான் சட்டம். இன்னும்!

பஸ் ஓட ஆரம்பித்ததும் முகத்தில் சுகமாக காற்று வந்து மோதியது.

சின்ன வயதில் லீவிற்கு அம்மாவுடன் தாத்தா ஊருக்குப் போகிற சமயம், ஜன்னல் ஓர சீட்டுக்காக இரண்டு பேருக்கும் பெரிய சண்டையே நடக்கும்.

இப்போது நினைத்துப் பார்க்கையில் அழுகை வந்தது. எஸ்.எஸ்.எல்.சியில் பெயில் ஆனபோது அப்பாவின் திட்டும் அடியும் தாங்காமல் ஓடிப் போன அண்ணன்.

அங்கேயே முதலாளியின் பெண்ணைக் காதலித்துக் கைப்பிடித்த அண்ணன்.

வீடு கட்டி பால் காய்ச்சும் பொழுது இவள் போகாத போதும் இவளுக்கு பட்டுப் புடைவை வாங்கி கௌரவித்த அண்ணன்.

பெண்களுக்குத் தனியாக ஆயிரம் ரூபாய் கொடுத்து, சேமிப்பில் போடச் சொன்ன அண்ணன் -

எங்கே எப்படி இருந்த போதும் மறக்காமல் தீபாவளி, கார்த்திகைக்குப் பணம் அனுப்ப மறக்காத அண்ணன் -

வீட்டை விட பஸ்ஸில் சௌகர்யமாக மனம் விட்டு கண்ணை மூடி மௌனமாக அழ முடிந்தது. கண்ணீரில் கரைந்தது அவன் பாசம்!

கணேஷ் தூங்க ஆரம்பித்திருந்தான். நிலவில்லாத இரவு பயமுறுத்தியது. விர்விர்ரென்று வாகனங்கள் பறந்து கொண்டிருந்தன.

உட்கார்ந்த நிலையிலேயே பலர் தூங்கி சாமியாடிக் கொண்டிருந்தார்கள்.

சில ஆண்கள் சிகரெட் புகைத்தபடி யோசனையில் இருந்தார்கள்.

பார்வதியால் தூங்க முடியவில்லை.

அண்ணனை எரித்துக் கரைத்திருப்பார்கள். ஒரு வாரமாய் எதுவும் சரியில்லை. தேங்காய் கண் பக்கம் உடைந்தது. தீபம் அணைந்தது.

கண் துடித்தது.

எதுவோ, யாருக்கோ, எப்போதோ என்று நினைத்தது - கடைசியில் உயிருக்கு உயிரான அண்ணனின் உயிருக்கே ஆபத்தாய் முடிந்திருக்கிறது.

நெஞ்சு விம்மியது.

வசதியான வாழ்க்கை.

அழகான மனைவி, அன்பான குழந்தைகள், தலைமுறைக்கு வரக்கூடிய சொத்து.

எல்லாம் இருந்தும் எதுவும் காப்பாற்ற முடியாமல் முடிந்து போன அண்ணன்!

உதவி கேட்டு எழுதிய கடிதங்கள் கிடைத்திருக்குமா...?

நேரில் வரும் போது செய்யலாம் என்றிருந்திருப்பாரா....!

இனி அதுவா முக்கியம்?

''பஸ் பத்து நிமிஷம் நிற்கும்...'' - கண்டக்டர் சொல்லி விட்டு இறங்கினார்.

வீடியோ நிறுத்தப்பட்டது.

கணேஷ் செருப்பை உதறி விட்டு சீட்டில் காலை மடித்து உட்கார்ந்து தூங்கிக் கொண்டிருந்தான்.

அண்ணனும் இப்படித்தான்.

தூக்கம் என்று வந்து விட்டால் சுற்றுப்புறம் கூட மறந்து போகும்.

சின்ன வயசில் உட்கார்ந்த இடத்தில் தூங்க வேண்டும்.

பார்வதிக்குப் படுத்த உடனே கூடத் தூக்கம் வராது. கடைசியாக தன்னை மறந்து தூங்குவாள்.

**அ**ண்ணனின் ஊருக்கு வந்து சேர்ந்த பொழுது மணி எட்டைத் தொட்டிருந்தது.

கணேஷிற்கு ஒரு காப்பி வாங்கிக் கொடுத்தாள்.

பஸ்ஸும் கார்களும், ஸ்கூட்டரும் ஆட்டோவும் விரைவதைப் பார்க்கும் அவனுக்கு பிரமிப்பாக இருந்தது.

பஸ் ஸ்டாண்டில் இருந்து வழி கேட்டுக் கேட்டு வருவதற்குள் மணி பதினொன்றைத் தொட்டிருந்தது.

வீட்டைப் பார்த்ததுமே தெரிந்து விட்டது.

பந்தல் போட்டிருந்தார்கள்.

வாசலில் மூன்று கார்களும், ஸ்கூட்டரும் நின்றிருந்தன.

பார்வதி வந்ததை யாரும் கவனித்ததாகத் தெரியவில்லை.

தெரிந்த முகம் எதாவது தென்படுகிறதா என்று பார்த்தாள்.

கல்யாண வீடு மாதிரி கலகலப்பாக இருந்தது, அவள் சோகத்தை அதிகரித்தது.

அண்ணனின் பெண்தான் பார்வதியை கவனித்தாள்.

கைக் குழந்தையுடன் இவள் பக்கம் வந்து "வாங்க அத்தே.." என்று உள்ளே கூட்டிப் போனாள்.

படம் பெரிதுபடுத்தி பெரிய பூமாலையுடன் ஊதுபத்தி ஏற்றி வைத்திருந்தார்கள்.

ஒரு விளக்கு எரிந்து கொண்டிருந்தது.

அவர் சம்பாதிப்பில் வளர்ந்த யாருக்கும் அவர் இழப்பு பெரிதாகத் தெரியவில்லை.

அண்ணி கூட பார்வதி நினைத்த மாதிரி எல்லாமே முடிந்து போன பாவனையில் இல்லை. இவளைப் பார்த்ததும் கொஞ்சம் அழுகை.

பிறகு அண்ணன் ஆஸ்பத்திரியில் சுகருக்கு ட்ரீட்மெண்ட் எடுத்ததை விவரித்த முறை -

''காலை எடுக்கணும்னு சொல்லிட்டாங்க. அதுக்கு முன்னால... முன்னால... ''

"சக்கர நாற்காலில இருந்து கஷ்டப் படறதை விட, கொஞ்சம் கொஞ்சமா சித்ரவதைப்பட்டு உயிர் போறதை விட, இது அவருக்கு நல்ல சாவு..." யாரோ சொன்னார்கள்.

உடம்பு சரியில்லாத சமயம் சொல்லி விடத் தோன்றவில்லை அவர்களுக்கு!

ஏன் தந்தி கொடுக்கவில்லை என்று கேட்க வந்தவளுக்கு -

ஏன் உடம்பு சரியில்லாத தகவல் கொடுக்கவில்லை என்று கேட்கத் தோன்றவில்லை. புரிந்து விட்டது எல்லாம்!

முடிந்து விட்டது ஒரு உறவு.

கணேஷ் - பார்வதியின் அண்ணன் பெண்ணின் குழந்தையைத் தூக்கி விளையாட்டு காட்டிக் கொண்டிருந்தான்.

அவன் எது செய்தாலும் - அது சிரித்தது.

அண்ணனின் படத்தையே அரை மணி

---



''தலைவரே ஒளிஞ்சிருந்தது போதும் மேடைக்கு வாங்க. மேடையை நோக்கி வீசினது நிஜ பாம்பில்லை இரப்பர் பாம்புதான்.''

— பிரசன்னகுமார்



# மாணவர்கள் கைகளைக் கட்டிப்போட்ட அரசு!

●● கல்லூரி மாணவர்கள் ஸ்டிரைக் செய்தால் முதலில் என்ன நடக்கும்? அரசு பஸ்கள் சேதமாகும். பார்த்தார், கேரள போக்குவரத்துத் துறை அமைச்சர் கே. பால கிருஷ்ண பிள்ளை! இது மாதிரி, மாணவர்கள் பஸ்களை சேதப்படுத்துகிறபோது, அதனைச் சரி செய்வதற்கான செலவுத் தொகையைச் சம்பந்தப்பட்ட கல்லூரியோ அல்லது மாணவர்களின் பெற்றோர்–ஆசிரியர் கழகமோ ஏற்றுக் கொண்டு செலுத்த வேண்டும். அப்படிச் செலுத்தாவிட்டால் சம்பந்தப்பட்ட கல்லூரி மாணவர்களுக்கு அரசு பஸ்களில் பயணம் செய்வதற்காகக் கொடுக்கப்படும் கட்டணச் சலுகைகள் ரத்து செய்யப்படும் என்று உத்தரவு போட்டு விட்டார். இது நடக்கவா போகிறது என்கிற அலட்சியத்தில் கொல்லத்திலுள்ள எஸ். என். கல்லூரி மற்றும் பாத்திமா கல்லூரி மாணவர்கள் சில பஸ்களைச் சேதப்படுத்தி விட்டனர். உடனடியாக அந்தக் கல்லூரிகளின் மாணவர்களுக்குக் கட்டணச் சலுகையை ரத்து செய்து விட்டார் அமைச்சர். இது பற்றி சட்டசபையில் கேள்வி எழுப்பப்பட்டபோதும் "சம்பந்தப்பட்டவர்களிடமிருந்து நஷ்ட ஈட்டுத் தொகை வராத வரையில் கட்டணச் சலுகைகள் கொடுக்க முடியாது; இதில் எந்தவிதமான மாற்றமும் கிடையாது!" என்று திட்டவட்டமாக அறிவித்து விட்டார் அமைச்சர்.

●● "உங்கள் கேள்விக்கான பதிலை சேகரித்துக் கொண்டிருக்கிறோம்..." என்று கடந்த மாதம் கேரள மீன்துறையிடமிருந்து வலது கம்யூனிஸ்ட் எம்.எல்.ஏ.வான சந்திரப்பனுக்கு ஒரு கடிதம் வந்தது. என்ன கேள்வி என்று அவர் மூளையைப் போட்டுக் குழப்பிக் கொண்டு தவித்தபோதுதான் நினைவுக்கு வந்தது, தாம் 1991–ம் ஆண்டு மீன்துறை அமைச்சர் பத்மாவிடம் கேட்ட கேள்விதான் அது என்று. இத்தனை ஆண்டுகளுக்குப் பிறகும் இப்படியொரு பதில்தானா? சீறியெழுந்தார் எம்.எல்.ஏ! அமைச்சர் பத்மா வருத்தம் தெரிவித்து அவர் கோபத்தை அமைதிப்படுத்தினார்.

திருவனந்தபுரத்திலிருந்து : **எஸ்.எஸ்.மணி**

---

நேரம் பார்த்துக் கொண்டிருந்தாள்.

இரவு முழுக்க கலங்கி வந்தவளுக்கு, அந்த ஆளுயரப் படம் அண்ணனே நேரில் நின்று பேசிக் கொண்டிருப்பது போல ஒரு ஆறுதல்.

"சாப்பிட வாம்மா..." கணேஷ் அழைத்தான்.

"பசிக்கலைடா கண்ணு..."

"சாப்பிடு பார்வதி..."

"வேண்டாம் அண்ணி. பசி இல்லே... கணேஷ், நீ சாப்பிட்டு வா. உடனே கிளம்பணும்."

"பார்வதி..."

"ஆமாம்..."

உறுதியாகச் சொன்னாள்.

பையன் சாப்பிட அவசரப்படுவது கூட அவளுக்குக் கேவலமாக இருந்தது. சோற்றுக்கு வழியில்லாமல் வந்திருப்பதாக நினைத்து விடக் கூடாது.

வந்திருக்கக் கூடாது. மூத்த பெண் சொன்னது சரி.

பாசம் அடித்துக் கொண்டதால் வந்த வினை. யாருக்குப் புரியப் போகிறது அவளின் பாசம்!

கிளம்பத் தீர்மானித்த சமயம் அண்ணி உள்ளே போய் கையில் ஒரு பையுடன் திரும்பினாள். முகம் மாறி இருந்தது.

"பார்வதி, தப்பா நினைக்காதே. உதவி கேட்டு உன் கடிதம் வந்தப்போ அவர் ஆஸ்பத்திரில இருந்தார். அவர் கவலை உன்னைப் பத்திதான். நான்தான் அவர் சந்தோஷத்துக்கு நீங்க நல்லா இருக்கறதா சொன்னேன். உன் பெண்களுக்கு என் சேமிப்புல நகை கூட வாங்கி வைச்சிருக்கேன். கஷ்டத்துல இருக்கும் போது இதைக் கொடுத்தா கரைஞ்சிடும்னுதான் தரலை. தப்பா நினைக்காதே பார்வதி, இது உன் வீடு..."

"அண்ணி..."

"உன் அண்ணன் போனதோட உறவு போயிட்டதா நினைக்காதே. நகை இந்தா! கஷ்டப்பட்டு முன்னேறி மேலே வந்த பிறகு இந்த நகைய உன் புருஷன் கண்ல காட்டு. உதவி தேவைன்னா எனக்குத் தாராளமா எழுது. என்ன..." என்று சொன்ன போது அதுவரை அடக்கி வைத்திருந்த அழுகை வெடித்தது.

"அண்ணி உங்களைப் போய்த் தப்பா நினைச்சுட்டேன். என் அண்ணன் தேர்வு சோடை போகாது" என்றாள்.

# எங்கோதானே என்கிற அலட்சியம் வேண்டாம்!

♦ 'வசிகர வை.கோ.' தலையங்கம் அருமை. வை.கோ.விடம் பிறர் சுட்டிக்காட்டும் பலவீனங்களை அவர் திருத்திக் கொள்ள முன்வர வேண்டும். அப்படி அவர் மாறாவிடில், அவரை நம்பியிருக்கும் இளைஞர்கள் கூட்டத்தின் கதி 'அதோ கதி'யாகி விடும் என்பதில் ஐயமில்லை.

தஞ்சாவூர்-5, வனிதா ரவி.

♦ குண்டு கலாசாரம் தமிழகத்தில் பரவி வருவது பற்றிய தலையங்கம் கண்டேன். அச்சு காய்வதற்கு முன்பே மற்றொரு குண்டு வீச்சு சம்பவம்; அதுவும் "பம்பாய்" நாயகர் மணிரத்னத்தின் மீது. தமிழகம் மெதுவாக பஞ்சாப் மாதிரி மாறி வருவது மனதை வருத்தப்பட வைக்கும் விஷயம். "பம்பாய்" படத்தின் வெற்றியை விட இந்த குண்டு வீச்சு மணிரத்னத்திற்கு கிடைத்த மிகப் பெரிய வெற்றி. அரசுக்கோ மிகப் பெரிய தோல்வி.

வேலூர் - 7, பா. வை. சுவாமிநாதன்.

♦ கபில்தேவ்வின் சின்னச் சின்ன ஆசையான காற்றாடி விடும் ஆசைக்கு மாஞ்சா தடவிய நூல் பட்டம் ரெடி.. கபில்தேவ் வருவாரா?

நாட்டரசன்கோட்டை, எஸ். ரோஜா.

♦ அப்பாவிடம் தப்பு என்ன? அலசுகிறது மன்-ஏஜ் கட்டுரை சரி. எங்களைப் போல மூன்றாம்தர, நான்காம் தர மக்களின் மன்-ஏஜ்களை சந்தித்து அப்பாவிடம் தப்பு என்ன? என்று அலசியிருந்தால் கட்டுரை இன்னும் சுவையாக இருந்திருக்கும்.

கடலூர் - 1, சாந்தன்.

♦ தங்களது தகப்பனார்களின் குறைகளை எடுத்துக்காட்டிய மன்ஏஜ்களுக்கு, சரியானபடி பதிலளித்த தகப்பனார்களைப் பாராட்டலாம்.

திருப்பரங்குன்றம், டி. கே. சுப்பிரமணியன்.

♦ நிர்மலா சக்ரவர்த்தி வழங்கிய 'குவா குவா கேட்க கூடுதல் உதவிகள்' சிறப்புக் கட்டுரை மிகவும் அருமை. குழந்தை இல்லாத தம்பதிகளுக்கு இக் கட்டுரை ஒரு வரப்பிரசாதம்.

சிதம்பரம், ஸ்ரீவித்யா காளிதாஸ்.

**ரூ. 20 பரிசு பெறும் கடிதம்....**

♦ அணு உலைகள் பற்றிய கட்டுரை படித்தேன். இரு முக்கிய தகவல்கள் : எத்தனையோ விஷயங்களுக்குக் காப்புறுதி வழங்கும் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகள் அணுஉலைகளால் ஏற்படும் விபத்துகளுக்குக் கூட அல்ல பாதிப்புகளுக்கும் இன்ஷ்யூரன்ஸ் பாதுகாப்பு அளிப்பதில்லை. அவை பத்திரமானவை எனில் ஏன் இந்தத் தயக்கம்? ரஷ்யா 12க்கும் மேற்பட்ட காலாவதியான அணுஉலைகளை என்ன செய்வது என்று தெரியாமல், பழுதாகிக் கழிக்கப்பட்ட சப்மரீன்களில் அடுக்கி, ஆர்க்டிக் கடலில் நோவாயா ஜமீலியா என்னும் பகுதியில் மூழ்கடித்துள்ளது. அதன் கதிர்வீச்சு அங்குள்ள சுற்றுச் சூழலை கடுமையாகப் பாதித்துள்ளது. எங்கோதானே நிகழ்கிறது என்று எண்ண வேண்டாம். கடல் மற்றும் கதிர்வீச்சின் தன்மையால் இது நாளா வட்டத்தில் நம் கடற்கரை வரையிலும் பரவக்கூடும்.

ஆதாரம் : "சண்டே ஹெரால்ட்"

சிட்லபாக்கம், அ. ஷண்முகசுந்தரம்.

♦ 'அரும்பும் உறவுகள்' மாதிரியான கதைகளை, நம் நாட்டுப் பெண்களிடம் தொடர்ந்து விழிப்புணர்வை ஏற்படுத்த அப்பப்ப ஆயுதமா பயன்படுத்திக்கிட்டே இருங்க. காலம் 'பழசு'களை மாற்றி விட்டது என்பதற்கு 'அம்மா' கேரக்டர் ஒரு உதாரணம்.

திருப்பூர் -1, எஸ். ரமேஷ்குமார்.

♦ 'சிரித்து வாழ வேண்டும்!' 'மதி'யாரின் 'ஜோக்ஸ்', 'மனம் விட்டு வாய் விட்டு சிரிக்க வைத்தாலும் பெண்கள் மனத்தைக் கொஞ்சம் வெதும்பவும் வைத்தது. ஒண்ணுமில்லைங்க! காலம் முன்னேறுகிறது! (மாறவில்லை!) பெண்கள் முன்னேற்றத்திற்காக அடிக்கடி குரல் கொடுத்து வருகிறீர்கள். ஸாரிங்க! எழுதி வருகிறீர்கள். அப்படியிருக்க, இந்த இதழில், டபுள்டெக்கர் வீடுகள்! ஜோக்கில், மனைவி சமைப்பது, கணவன் வீட்டு வேலை எதுவும் (உதவி) செய்யாமல் 'ஈஸி'சேரில் சாய்ந்திருப்பது போலவே 'கார்ட்டூன்' வரைவதை மட்டும் ஏன் நிறுத்துவதில்லை?

சென்னை - 78, பூங்கோதை குப்புஸ்வாமி.

♦ கல்கி 09.07.1995 இதழில் பா. ஜெயக்குமார் எழுதியிருந்த 'அதுவரை...' எனுந் தலைப்பிலான கவிதை பிரசுரமாகியிருந்தது. இக் கவிதை ஏற்கெனவே 13.08.1990 தினமலர் வாரமலரில் 'கேள்வி' எனுந்தலைப்பில் நான் எழுதியது. இக்கவிதையை டாக்டர் கலைஞர் எழுத்தாளர் சாவியின் 75-வது பிறந்த நாள் விழாவில் மேற்கோள்காட்டி, பாராட்டியும் பேசியுள்ளார். இக் கவிதையின் சிறப்பை எண்ணி எனது 'மௌன வெளிச்சம்'; 'வழி தேடும் விழிகள்'; 'இரண்டாவது அபிப்பிராயம்' ஆகிய நூல்களின் பின் அட்டையிலும் அச்சிட்டு உள்ளேன். இவ்வாறு உண்மையிருக்க, பா. ஜெயக்குமார் என்பவர் தம்முடைய கற்பனையில் எழுந்தது போல் எழுதியுள்ளதும் பிரசுரமாகியுள்ளதும் வேதனையாக உள்ளது. இப்படிப்பட்ட போலிக் கவிஞர்களை இனங்கண்டு கொள்வீர்கள் என்று நம்புகின்றேன்.

மதுரை, பொன். இரவீந்திரன்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka